# கல்கி

இலவசம்: சென்னை ஸ்கேன்
சென்னை வாசகர்களுக்கு மட்டும்

KALKI
26.9.2004 ரூ.6.00

மேக்னட் நாயகி!



வைகோ :

## "சன் டீ.வி பார்ப்பதில்லை!"






ஆனந்தம் இன்றே
ஆரம்பமாகட்டும்
ஆடைகளின் தேர்வு
ஆச்சர்யமாகட்டும்

விழாக்கால
பட்டுப்புடவைகள்,
மில், பேன்சி சேலைகள்,
ஆடவர் சூட்டிங்ஸ்,
சர்ட்டிங்ஸ், சுடிதார்
மெட்டீரியல்கள்,
காட்டன் கலெக்ஷன்ஸ்.









ராஜ்மஹால்

வெங்கலக்கடைத் தெரு, மதுரை-1.
போன்-2622647



தொட்டுத் தொடரும் ஒரு பட்டுப் பாரம்பரியம்

# 2,3 விஷயம்!

## கல்வி விற்பனைக்கு!

கல்வி, வியாபாரமாகி விட்டது என்று புலம்பிக் கொண்டிருப்பவர்களுக்கு ஓர் ஆறுதல் செய்தி... இந்த வியாபாரம் படுத்துவிட்டது! போட்ட முதலீட்டுக்கு லாபமில்லை என்கிற நிலைமை ஆரம்பமாகிவிட்டது. ஆம்... 'ஸ்ரீபெரும்புதூர் தாலுகாவில் இயங்கிக் கொண்டிருக்கும். ஒரு இன்ஜினியரிங் கல்லூரி, எல்லா வசதி மற்றும் கட்டமைப்புகளுடன் விற்பனைக்கு உள்ளது' என்ற விளம்பரம், 'பிசினஸ் ஃபார் ஸேல்' என்ற பிரிவில் 'பிஸினஸ் ஆஃபர்ஸ்' என்ற தலைப்பில், 'தி ஹிண்டு' நாளிதழில் வெளியாகியுள்ளது. இது எப்படி இருக்கு!

(அது சரி, விற்பனையான பிறகு மாணவர்கள், ஆசிரியர்கள், பேராசிரியர்கள் அப்படியே தொடர்வார்களா?)

- கே. தெய்வசிகாமணி, சென்னை.

## இதுதான் சரி!

கல்கி (12.9.04) இதழில் 4, 5, 6 விஷயம் பகுதியில் 'மண்டை காயுது' என்ற தலைப்பில் என்.பாலகிருஷ்ணன் மதுரையில் இருந்து எழுதியதைப் படித்தேன். ஹாஸ்பிடாலிட்டி என்பதற்கு 'உபசரணை' என்பதுதான் சரியான பதில். ஏனெனில், விருந்து உண்ணச் செய்வதோடு, மற்ற எல்லாவித வசதிகளையும் செய்து கொடுப்பதுதான் உபசரணை. ஆகையால் விருந்தோம்பல் என்பது சரியான பதில் இல்லை.

- ஜி. ரகுநாதன், ஈரோடு.

## யார் அவர்?

கண்ணனூர் சிறையில் இருந்தபோது விஜ்கராஜு என்பவர், ரஷ்ய எழுத்தாளர் மாக்ஸிம் கார்க்கியின் 'அன்னை' என்ற நூலை மறைவாகவும், விரைவாகவும் மொழிபெயர்த்து முடித்தார். ரகசியமாகக் கையெழுத்துப் பிரதியையும் வெளியே அனுப்பி, அதைப் புத்தகமாகவும் போட்டுவிட்டார்.

புத்தகம் வெளிவந்ததை அறிந்த உடனேயே. அப்போது ஆட்சி நடத்தி வந்த பிரிட்டிஷ் அரசாங்கம், அப்புத்தகத்துக்குத்

## எஸ்.எம்.எஸ். குறும்பு!

அண்மையில் எனக்கு ஒரு நண்பி அனுப்பியிருந்த எஸ்.எம்.எஸ். இது....

I want you...
To be with me Today evening...
In a Nice Restaurent...
To have candle light dinner...
And say those sweet three words to you...
'Pay the Bill'

- ஜெயமுருகன், கோவை.



தடை விதித்தது. ஆனால், காங்கிரஸ் ஆட்சியில் தோன்றிய அமைச்சரவையில், முதலமைச்சராக இருந்தவரால் அத் தடை நீக்கப்பட்டது. அவர் கம்யூனிசத்தின் நேர் எதிரியான இராஜாஜியேதான்!

- **வியாசை கிருஷ்ணன், சென்னை.**

### காமாலைக் கண்ணுக்கு...

**எ**னது கணவர் மற்றும் குழந்தைகளுடன் கோயிலுக்குச் சென்றேன் (நெல்லை மாவட்டம் பாபநாசம்). பூஜைப் பொருள்கள் வாங்குவதற்காக அங்குள்ள அபிஷேக ஸ்டால் ஒன்றில் தேங்காய், பழம், பன்னீர் வாங்கினேன். பன்னீர் பாட்டிலைப் பார்த்ததும்



இடுக்கிட்டேன். காரணம், அது ஒரு பிராந்தி பாட்டில்! என் கணவரும் அதைப் பார்த்துவிட்டு கடைக்காரரிடம், "என்னங்க இது... சுவாமிக்கு அபிஷேகம் பண்ற பன்னீரை இப்படி பிராந்தி பாட்டில்ல அடைச்சு விக்கறீங்களே... இது பாவமில்லையா?" எனக் கேட்டார். உடனே கடைக்காரர், "கோயிலுக்கு வந்திருக்கறீங்க. உண்மையான பக்தர்களுக்கு எந்த பாட்டில்ல பன்னீர் இருந்தாலும் அது பன்னீர் பாட்டிலாத்தான் தெரியும்... தெரியணும். நீங்க ஏன் அதை பிராந்தி பாட்டில்னு நெனைக்கறீங்க?" என்றார். பேசாமடந்தையாகி நாங்கள் நகர்ந்தோம்.

- **எஸ். சக்தி, விக்கிரமசிங்கபுரம்**




**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி.ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ.330/-**
**ஆறு மாதம் : ரூ.165/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : **62 யு.எஸ். டாலர்**
**இலங்கை : ரூ.2000/-**

Bharathan Publications
Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு



**பா**லிவுட்டில் பரபரப்பு அடங்கும் முன்னரே கோலிவுட்டில் குதித்திருக்கிறார் மேக்னா நாயுடு. சூப்பர் மாடல் ஷவார் அலியுடன் இவர் அறிமுக நாயகியாக கலக்கியிருக்கும் 'ஹவாய்' படம் வெளிவரும் முன்னரே, அரை டஜன் ஹிந்திப் படங்களில் கதாநாயகியாக இரவு பகலாக நடித்துக் கொண்டிருக்கிறார். இதற்கிடையில் விஜய டி.ராஜேந்தரின் 'வீராசாமி' படத்தின் மூலம், தமிழிலும் அறிமுகம். 'வீராசாமி' பட பூஜையில் சூழ்ந்துவிட்ட ரசிகர்களின் உற்சாகக் கைகுலுக்கலில் மூச்சுத் திணறி, மீட்கப்பட்ட மேக்னாவை அணுகினோம்;

# மேக்னா நாயுடு!

படபடவென்று பேச ஆரம்பித்தார்.

''மாடல் உலகில் அங்கீகாரம் கிடைத்தால் ஐந்து வருடங்கள்தான் ஜொலிக்க முடியும். அதற்குள் விளம்பரம், மியூசிக், வீடியோ, சினிமா என்று ஒரு ரவுண்ட் வந்துவிடவேண்டும். இப்போது எனக்கான ரவுண்ட் ஆரம்பித்திருக்கிறது'' என்றவரிடம், '' 'வீராசாமி' பட வாய்ப்பு கிடைத்தது எப்படி?'' என்றோம்.

''நான் நடித்த 'ஹவாஸ்' இந்திப் படத்தின் விளம்பரக் காட்சிகளை சேனல்களில் பார்த்துவிட்டு, விஜய டி. ராஜேந்தர் என்னைத் தொடர்பு கொண்டார். அவர் எனக்குத் தந்த முதல் காம்ப்ளிமெண்ட், 'நீ மேக்னா

நாயுடு அல்ல மேக்னெட் நாயுடு' என்றதுதான்'' என்கிற இந்த அழகுப் புயல், முன்னாள் டென்னிஸ் வீராங்கனை.

இந்தியில் மிதுன் சக்கரவர்த்தியோடு இவர் நடித்து வரும் 'கிளாசிக் - டான்ஸ் ஆஃப் லவ்' படம், சர்ச்சையில் சிக்கிக் கொண்டிருப்பது பற்றிக் கேட்டதும் தெளிவான பதிலை ரெடியாக வைத்திருப்பது போல் சொல்கிறார். "அந்தப் படத்தில் நான் ஒரு பாலியல் தொழிலாளி; பாரில் டான்ஸர். மிதுன் சக்கரவர்த்தி ஓர் ஆன்மிக குரு. ஒரு கட்டத்தில் வாழ்க்கையில் வெறுப்புற்று



குருவிடம் சிஷ்யையாக சேர்ந்து விடுகிறேன். அவரது தினசரிப் பிரசங்கங்களில் நான் அதிகக் கேள்விகள் கேட்கப் போய், குரு ஆன்மிகத்தைத் துறந்து, லௌகீகத்துக்கு வருவது போல் கதை. இன்று இந்தியாவில் பல ஆன்மிக குருக்களின் வாழ்க்கையில் ஏற்படும் திருப்பம்தானே இது? இந்தப் படத்தை ஏன் தடை செய்ய சிலர் கங்கணம் கட்டி அலைகிறார்கள் என்று தெரியவில்லை! எப்படியோ 'கிளாசிக்ஸ்' படத்துக்கு நல்ல விளம்பரம் கிடைக்க ஆரம்பித்திருக்கிறது'' என்று கூலாகப் பேசும் மேக்னாவுக்கு, 'வீராசாமி'யில் எதுமாதிரி பாத்திரம்?

"கதையைக் கேட்காமலேயே ஒப்புக்கொண்டிருக்கிறேன். வி.டி.ஆரின் (அட!) திறமை ரசிகர்களுக்கு தெரியாதா?'' என்கிறார் அசத்தலாக. பொழைச்சுக்குவீங்க அம்மணி!

**- சக்கரம்**



*"நாற்பத்தி நாலு! நூத்தி நாற்பத்தி நாலு... கள்ளுக்கடை மறியலுக்கு நாற்பத்திநாலு!"*

– சுதந்திரப் போராட்டக் காலத்தில் கள்ளுக்கடை மறியலைத் தடை செய்தது பிரிட்டிஷ் அரசு. அத்தடையை மீறியவர்கள் பேரில் தடியடி நடத்தியது. அப்போது அவ்வரசை ஏசுவதற்காக, இப்படி கிராமிய மெட்டில் பாடல் புனையப்பட்டது என்று பாட்டிமார்கள் சொல்லியும், பாடியும் கேட்டதுண்டு.

இன்று வீதிதோறும் டாஸ்மாக் மதுவை சைக்கிளில் ஏற்றிச் சென்று விற்குமாறு பணித்துள்ள நமது அரசை, என்ன சொல்லி ஏசிப் பாடுவது!

வீதிதோறும் மதுவின் முழக்கம்
வீடுதோறும் மதுவின் வாசம்
நாடுபோற்ற நல்கிய அரசே
நீடுவாழி நீடு வாழி!

என வஞ்சப்புகழ்ச்சி வேண்டுமானால் பாடலாம்!

இந்த இருபத்தோராம் நூற்றாண்டில் மது அருந்துவதை, அதுவும் அரசே தயாரித்து விற்பனை செய்யும் மது அருந்துவதை எதிர்ப்பது பத்தாம் பசலித்தனம்; பிற்போக்கு என்று நம்புவோர் உண்டு.

'கள்ளச்சாராயம் குடிப்பதற்குப் பதில் இதைக் குடிப்பது எவ்வளவோ மேல்' என்று வாதிடுவோரும் உண்டு.

மதுவுக்கு அடிமையாகி அழிவது என்பது மிகச் சுலபமான விஷயம். ஒவ்வொரு குடும்பத்திலும் இதற்கு ஓர் உதாரணம் இருக்கிறது. ஒவ்வொரு சொட்டு ஆல்கஹாலும், அருந்துபவரின் மூளையிலுள்ள செல்கள் மீது மோசமான விளைவை ஏற்படுத்தும். எனவே, எப்போதேனும் ஒருமுறை அருந்துவதுகூட நல்லதற்கல்ல. இந்நிலையில் வீதி வீதியாக மதுவைக் கூவி விற்பதென்பது, மக்களின் உடல், அறிவு, மனம், பொருளாதாரம் அனைத்துக்கும் ஒரு சேர வேட்டு வைக்கிற விஷயம்.

தப்பித்தலை நாடுவது களைத்துப் போன மனித மனத்தின் இயல்பு. மதுவைத் தப்பித்தல் மார்க்கமாகக் கருதுவோர், அதன் பாதிப்பில் தாங்கள் எவ்வளவு தூரம் கௌரவம் இழந்து நிலைகுலைகிறார்கள் என்பதை அறியாதவர்கள்

**ஆசிரியர் பக்கம்**

அல்ல... அறிந்தும், அதை வாங்கிக் குடிக்கிறார்கள் என்பது, அந்த போதைப் பொருளின் வலிமையையே உணர்த்துகிறது. மதுவிடம் தோற்பது தங்கள் தனி மனித உரிமை என்று கருதுவோரை, யாரும் கரையேற்ற முடியாது. ஆனால், தோற்கும்படி அரசே அழைப்பு விடுக்கிறபோது, அதுவும் வீட்டு வாசலிலேயே வந்து கூவி அழைக்கிறபோது, மத்தியதர வர்க்கத்தின் ஆணிவேரைத் தாக்குகிறது. குடிப் பழக்கத்துக்குத் தகுதியற்றதொரு அங்கீகாரமும் விளம்பரமும் கிடைக்கின்றன.

# காதிலே பூ... வாயிலே மது!




மத்திய அரசும் இந்தக் கைங்கரியத்தில் ஒன்றும் பின்தங்கிவிடவில்லை... இன்லன்ட் கவர்களின் பின்புறமுள்ள பேக்பைப்பர் கிளப் சோடா விளம்பரத்தைப் பாருங்கள்! காதிலே பூ... வாயிலே மது!

நடைப்பயணம்
மாபெரும்
வெற்றி

நடைப்பயணம்
வெற்றி

## ‘பாரதியதா’ என்னும் பம்மாத்து!

**பா.ஜ.க.** ஆளும் மாநிலங்களின் முதல்வர்கள் தலைநகரில் கூடியபோது, அவர்களுக்கு வாஜ்பாய் ஏராளமாக உபதேசம் செய்திருக்கிறார். முக்கியமாக, ‘இன்னும் கூடுதலான பொறுப்புகளுக்கு’ அவர்கள் தங்களைத் தயார்ப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று அறிவுறுத்தியிருப்பது, எல்லோரையும் சிந்திக்க வைத்திருக்கிறது. மத்திய அரசில் ஆட்சி மாற்றம் வரக் கூடும் என்று எதிர்பார்த்தே வாஜ்பாய் அவ்வாறு பேசியதாகக் கூட ஒரு சில பா.ஜ.க. முதல்வர்கள் நம்புகிறார்கள்!

எதை மனத்தில் கொண்டு வாஜ்பாய் பேசினாரோ, தெரியாது... ஆனால் முதல்வர்களிடம் அவர் கோரும் பொறுப்புணர்வு, கட்சியின் உயர் மட்டத்திடம் இருக்கிறதா என்று கொஞ்சம் ஆத்ம பரிசோதனை செய்து பார்ப்பது நல்லது.

ஐக்கிய முற்போக்குக் கூட்டணி, ஆட்சி அமைந்த நாள் முதலாக, நாடாளுமன்றக் கூட்டங்களை நடக்கவிடாமல் இடையூறு செய்து, வெளிநடப்பும் செய்து வந்திருக்கிறது. முக்கிய எதிர்க்கட்சியான பா.ஜ.க. பட்ஜெட் விவாதங்களைப் புறக்கணித்துவிட்டு, பட்ஜெட் தீர்மானம் நிறைவேறிய பிறகு குறை காண முயன்றிருக்கிறது. அதிர்ந்து பேசாத பிரதமரே கோபப்படும் அளவுக்கு நடந்து கொண்டிருக்கிறது.




கல்கி



2004 செப்டெம்பர் 26
தாரண புரட்டாசி 10
மலர் : 63
இதழ் : 9


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




நாடாளுமன்ற நடவடிக்கைகளைத் தடை செய்ததற்காக, பின்னர் அத்வானி பி.பி.ஸி பேட்டியில் வருத்தம் தெரிவிக்க, வெங்கையா நாயுடுவோ, 'கறைபடிந்த அமைச்சர்களை எதிர்த்துப் போராட்டம் தொடரும்' என அறிக்கை தருகிறார். போதும் போதாததற்கு, உமாபாரதி கைதையும், வீர் சாவர்க்கர் விவகாரத்தையும் பிரும்மாண்டமாக்கி, உணர்ச்சிப் போர்க் கொடியோடு மக்களிடையே உலாவரத் திட்டமிட்டுள்ளது பா.ஜ.க. இந்த விஷயங்களை எதிர்த்து நாடு தழுவிய போராட்டம் நடக்குமாம். ஆக்கபூர்வமான பணிகளைச் செய்யாமல், இவ்வாறு மக்களின் கவனத்தைக் கவர போராட்டம், ஊர்வலம் என்று செயல்படுவது எந்த வகை பொறுப்புணர்வில் சேரும்?

'நாட்டில் அதிகரித்து வரும் பயங்கரவாதத்துக்குக் காரணம், வேலையில்லாத திண்டாட்டம் தான்' என்று வாஜ்பாய் அந்த முதல்வர்கள் மாநாட்டில் கருத்துக் கூறு கிறார். ஆனால், வெங்கையா நாயுடுவோ, பொடா ரத்தாகிற நேரத்தில் அமல் செய்யும் வகையில், வேறு ஒரு பயங்கரவாத தடைச் சட்டத்தை, மாநில அளவில் வரைந்து தயார்ப்படுத்தி வைக்கும்படி ஆணையிடுகிறார்.

மத்திய அரசு பாடப் புத்தகங்களில் செய்யும் திருத்தங்களை எதிர்ப்பது, அனைத்துத் தரப்பினருக்கும் இரு குழந்தை குடும்பத்தை வலியுறுத்துவது போன்ற திட்டங்கள் ஹிந்து அடிப்படைவாதத்தின் அஸ்திவாரத்திலிருந்து எழுபவை.

ஆனால், வெகு சாமர்த்தியமான வார்த்தை விளையாடலில் 'ஹிந்துத்வா' என்ற கொள்கைக்கு 'பாரதியதா' என்று மாற்றுப் பெயர் சூட்டி, பி.ஜே.பியின் அடிப்படைவாதம் கைவிடப்பட்டது போன்ற ஒரு பிரமையை ஏற்படுத்தியிருக்கிறார் வாஜ்பாய்.

" 'ஹிந்துத்வா' என்று சொன்னால்தானே மத அடிப்படைவாதம்போல் தோன்றுகிறது? 'பாரதியதா' என்று எங்கள் கொள்கையை அழைக்கிறோம். நமது நாட்டுக்கே உரிய




பண்பாடு, வாழ்க்கை முறையைப் போற்றி, அதைச் சார்ந்து அரசியல் பண்ணுவதே 'பாரதியதா' " என்று விளக்கம் தரப்பட்டிருக்கிறது.

ஆனால், பா.ஜ.கவின் பரிவார அமைப்பான வி.எச்.பி என்ன செய்கிறது...? 'அஃப்ஸல் கான் சமாதியைச் சட்ட விரோதமாக இடித்துத் தள்ளுவோம்' என்று புறப்படுகிறது. நல்ல காலமாக, மஹாராஷ்டிர அரசு அந்த முயற்சியை இடைமறித்துத் தடுத்து விட்டது.

குஜராத் கலவர வழக்குகளை, மோடி அரசு நேர்மையாய் நடக்கவிடாமல் சாட்சியங்களை அழித்து, சாட்சிகளை மிரட்டி வந்ததால், இரண்டு முக்கிய வழக்குகள் உச்ச நீதிமன்ற உத்தரவின் பேரில் மஹாராஷ்டிராவுக்கு மாற்றப்பட்டன. 'போதுமான சாட்சியங்கள் இல்லை' என குஜராத் அரசு வாபஸ் வாங்கிய வழக்குகளை, மீண்டும் நடத்தும்படியும் உச்சநீதிமன்றம் உத்தரவிட்டது. மோடி அரசை வன்மையாகக் கண்டனமும் செய்தது. ஆனால், பா.ஜ.க. தலைமை, இது குறித்து துளியும் கவலைகொள்ளவில்லை. மோடியை விசாரிக்கவோ, அவர் ராஜினாமாவைக் கோரவோ முயற்சிகூட செய்யவில்லை.

இந்நிலையில் 'பாரதியதா' என்ற புதிய சொல், ஏதோ மதச்சார்பின்மையைக் குறிப்பதான தோற்றத்தை மட்டும் ஏற்படுத்த பா.ஜ.க. தலைமை முயன்று வருகிறது.

'இந்தியா ஒளிர்கிறது' என்று மக்கள் நம்பிவிடவில்லை; பாரதியதா பரிசுத்த நோக்குடையது என்றும் அவர்கள் சுலபத்தில் நம்பிவிடமாட்டார்கள்.

பா.ஜ.க. முதல்வர்கள் மாநாட்டில், சுய உதவிக் குழுக்கள் அமைத்தல், எழுத்தறிவு இயக்கம், சுகாதாரம், உள்ளாட்சி அமைப்புகளை பலப்படுத்துதல் போன்ற இலக்குகளும் நிர்ணயிக்கப்பட்டுள்ளன. கட்சித் தலைமை, இவற்றுடன் வேலை வாய்ப்புப் பெருக்கம், மதச்சார்பின்மை ஆகியவற்றையும் இணைக்கட்டும்... பா.ஜ.க சிறக்கும்; இந்தியாவும் ஒளிரும். ○

# “நான் சன் டீ.வி. பார்ப்பதில்லை!”

## –வைகோ பேட்டி

அரைநாள் அடாவடி சிறைவைப்பு மூலம் அரையாண்டுக்கான இலவச விளம்பரம் அரசால் வழங்கப்பெற்ற வைகோ, அந்த அமர்க்களங்களெல்லாம் நிகழும் முன் செங்கல்பட்டில் அளித்த பேட்டி இது!



இது அறிவியல் யுகம். வானொலி, தொலைக்காட்சி மூலம் மிகப் பரந்த அளவில் எளிதாக மக்களைச் சென்றடையலாம். இந்த நிலையில் உடலை வருத்திக் கொள்ளும் நடைப்பயணம் அவசியமா?

*குளிர்சாதன அறையில் இருந்து கொண்டு தொலைக் காட்சி மூலம் மக்களிடம் பேசுவதில் எனக்கு உடன்பாடு இல்லை. மக்களின் உணர்வுகளோடு, எண்ணங்களோடு கலக்க விரும்புகிறேன். அதோடு, தொண்டர்களிடையே நெருங்கிப் பழகும் வாய்ப்பும் ஏற்படுகிறது. தொண்டர்கள் ஒவ்வொருவரைப் பற்றியும் தெரிந்து கொள்ள முடிகிறது. இதனால் அவர்களிடம் ஒரு ஒழுங்கை ஏற்படுத்த முடிகிறது. ஆகவேதான் நடைப்பயணம்!*

**‘உங்களைப் பற்றி, குறிப்பாக இந்த நடைப் பயணம் பற்றிய செய்திகளுக்கு சன் டீ.வியில் உரிய முக்கியத்துவம் அளிக்கப்படுவதில்லை’ என்று ஒரு கருத்து நிலவுகிறதே.**

*எனக்கும் அது தெரியும். அவர்களுக்குத் ‘தகுதியானது’ என எதை நினைக்கிறார்களோ அதை ஒளிபரப்புகிறார்கள். ‘செய்தி’ வெளியிடும் அளவுக்கு எனக்குத் தகுதி இல்லை என்று நினைக்கிறார்கள். நான் ‘பொடா’ சிறைவாசியாக இருந்து, வெளியே வந்த போது என்னை வரவேற்க வந்த தொண்டர்களைக் காட்டாமல், என் கைப் பெட்டியை மட்டும் காட்டினார்கள். அவர்கள்*



என்னைப் பற்றிச் செய்தி வெளியிடுவதில்லை. நானும் அந்தத் தொலைக்காட்சியைப் பார்ப்பதில்லை.

**இதனால் உங்களுக்கும் கூட்டணிக் கட்சியான தி.மு.க.வுக்கும் இடையே பிணக்கு ஏற்பட வாய்ப்பு உள்ளதே!**

அது தனிப்பட்ட ஒரு குடும்பத்தினுடைய தனியார் தொலைக்காட்சி! அரசியல் கட்சியின் தொலைக்காட்சி அல்லவே! ஆகவே கூட்டணிக்குள் எந்தப் பிரச்னையும் ஏற்படாது.

**'சேது சமுத்திரத் திட்டம், தேசத்திற்கே நலம் பயக்கும் திட்டம். இதற்கு அரசியல் கட்சிகள் ஆளாளுக்கு உரிமை கோருவது சரிதானா?**

'வெற்றி'க்கு ஆயிரம் பேர் உரிமை கொண்டாடுவார்கள். 'தோல்வி' ஒரு அநாதை என்பார்கள். அது தான் என் நினைவுக்கு வருகிறது.

1982ல் இத் திட்டம் பற்றி நாடாளுமன்றத்தில் பேசினேன். தொடர்ந்து பல முறை கேள்வி எழுப்பினேன், இப்படி ம.தி.மு.க. தொடர்ச்சியாக வற்புறுத்தி வந்ததன் காரணமாக, 98ம் வருடம் செப்டெம்பர் 15ம் தேதி ம.தி.மு.க. நடத்திய பிரம்மாண்டமான கூட்டத்தில், இத்திட்டத்தை நிறைவேற்றுவதாக வாஜ்பாய் அறிவித்தார்.

கப்பல் துறை அமைச்சராக தம்பிதுரை இருந்தபோது, தொடர்ந்து வலியுறுத்தினேன். அ.தி.மு.க எம்.பியாக இருந்த மலைச்சாமி கூட, இத்திட்டத்திற்காக நான் உழைத்ததைப் பேசியிருக்கிறார்.

இப்போது ஐக்கிய முற்போக்குக் கூட்டணி ஆட்சியிலும், குறைந்த பட்ச

பொதுச் செயல்திட்டத்தில் சேர்க்க வலி யுறுத்தினேன். இத்திட்டம் நிறைவேறுவ தில் ம.தி.மு.கவின் பங்கு நூற்றுக்கு நூறு இருக்கிறது.

இதையெல்லாம் ஏன் சொல்கிறோம் என்றால், மக்களுக்குத் தாங்கள் ஆற்றிய பணியைச் சொல்வது அரசியல் கட்சி களின் கடமை. மற்றபடி இவற்றைச் சொல்லி கூலி கேட்கவில்லை.

**வாரிசு அரசியல் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

இது பற்றி நான் ஏதும் கருத்து சொல்ல விரும்பவில்லை. ஆனால் ம.தி.மு.கவில் அப்படி ஒரு நிலை இல்லை.

**அரசியல் கட்சிகளின் முக்கிய நோக்கம் ஆட்சி அதிகாரத்தைப் பெறுவது தான். ஆனால் நீங்கள் மத்திய அரசில்**



**பங்கேற்க வாய்ப்பிருந்தும் மறுத்து விட்டீர்கள். இது தொண்டர்களிடையே சோர்வை ஏற்படுத்தாதா?**

ஏற்படுத்தவில்லை; ஏற்படுத்தாது. எங்கள் தொண்டர்கள் ஒவ்வொருவரும் மக்களுக்காகத் தங்களை அர்ப்பணித்துக் கொண்டவர்களே தவிர, பதவி சுகத்துக்கு ஆசைப்படுபவர்கள் அல்ல. மத்திய அரசில் பங்கேற்க வேண்டாம் என்ற முடிவை, தொண்டர்கள் அனைவரும் மனமுவந்து ஏற்றுக் கொண்டார்கள். அதே நேரத்தில் நாங்கள் முற்றும் துறந்த முனிவர்களும் அல்ல. மக்கள், எங்களை எங்கே வைத்து வேலை வாங்க உத்தரவிடுகிறார்களோ, அங்கே இருந்து தன்னலமற்ற மக்கள் பணி ஆற்றுவோம்.

**திரைப்பட நடிகர்கள் பலருக்கு அரசியல் ஆசை ஏற்படுகிறது. இது பற்றி**

### ம.தி.மு.க. செப்டெம்பர் 15 விழா துளிகள்...

★ மைதானத்தில் பெரியார்- அண்ணா ஆகியோருக்குத்தான் மின் விளக்கு கட்-அவுட் வைக்கப்பட்டிருந்தது.

★ கூட்டத்தில் அறுபது சதம் இளைஞர்கள்தான்.

★ சீருடை அணிந்த தொண்டர் அணியில் பெண்கள் அணியும் உண்டு.

★ மேடைக்கு நேர் எதிரே ஒரு கிரேனில் காமிரா பொருத்தப்பட்டு இருந்தது. அது சுற்றிச் சுற்றி வந்து படமெடுத்துக் கொண்டிருந்தது. (டீ.வி.க்காக?)

★ பத்திரிகையாளர் என்.ராம், "நான் ஆட்சியில் இருந்திருந்தால் சேவாக் போல 'பொடா'வை துவக்கத்திலேயே விளாசி

**உங்கள் கருத்து என்ன?**

மக்கள் ஏற்றுக் கொண்டால் யார் வேண்டுமானாலும் அரசியலுக்கு வரலாம்.

**இலங்கை அரசு - புலிகள் பேச்சு வார்த்தையில் இந்தியா தலையிட வேண்டுமா?**

அண்டை நாட்டில் குண்டுகள் வெடித்துக் கொண்டே இருப்பது நமக்கும் நல்லது அல்லவே! பழைய பிரச்னைகளை விட்டு விட்டு, இப்போதைய சூழல் பற்றி சிந்திக்க வேண்டும். அதுதான் எதிர்காலத்தில் அனைத்து மக்களும் நலமாக வாழ வழி செய்யும். பிரதமரிடமும் அயலுறவுத் துறை அமைச்சர் நட்வர் சிங்கிடமும் இது குறித்துப் பேசியிருக்கிறேன்...

இந்த நிலையில் கல்கி வாசகர்களிடம் ஒரு விஷயத்தைப் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். இந்தியா பல தேசிய இனங்களை உள்ளடக்கியது என்ற உண்மை, ஆழ்ந்து சிந்தித்தால் புலப்படும். அதே நேரம் இந்தியத் திருநாட்டின் ஒருமைப்பாட்டில் பெரிதும் அக்கறை உள்ள இயக்கம் ம.தி.மு.க.

**உங்கள் நடைப்பயணத்தை, அதற்குக் கிடைக்கும் ஆதரவை தி.மு.க. எப்படி நோக்குகிறது?**

எந்த கட்சியும் அதனதன் தனித் தன்மையோடு கட்சிப் பணி செய்து, தனது இயக்கத்தை வளர்க்கத்தான் முனையும். நாங்கள் எங்கள் கட்சியை வளர்க்க முனைகிறோம். அவ்வளவுதான். எங்கள்

"ஒழித்திருப்பேன்" என்றார் ஆவேசமாக.

★வலம்புரி ஜான் பேசும்போது, பெயர் சொல்லாமல் கலைஞரைத் தாக்க, கூட்டம் புரிந்து கொண்டு கலகலத்தது.

★வாலி, கலைஞரை மேன்மைப்படுத்திப் பேசினார்.

★இயக்குனர் சேரன் "இளைஞர்களின் நம்பிக்கை வைகோதான்" என்றார்.

★நல்ல பல விஷயங்களை உதயமூர்த்தி பேசினாலும், கூட்டத்தில் நிலவிய சூடான அரசியல் சூழலில், அவரது பேச்சு எடுபடவில்லை.

★மூன்று முறை இமயத்தின் சிகரத்தைத் தொட்ட சாதனையாளர் மன்மோகன் கொஹ்லியா 'ராஜீவ் காந்திக்கு அடுத்தபடியாக எனக்குத் தலைவராகத் தென்படுபவர் வைகோ'தான் என்று ஒரு போடு போட்டார்.

★சரியாகப் பத்தே முக்காலுக்கு மைக்கைப் பிடித்தார் வைகோ. வெயிலிலும், மழையிலும் நடைப்பயணமாக வந்ததில் அவரது தொண்டையும் பாதிக்கப்பட்டிருந்தது. ஆனால் போகப்போக சதாப்தி வேகம். ''அண்ணாவை நான் தூர இருந்தே பார்த்தவன்" என்று துவங்கி, சேது சமுத்திர வரலாற்றைச் சுட்டிக் காட்டி, ''எந்தச் சவாலையும் ஜனநாயக ரீதியில் சந்தித்து வெல்வோம். சர்வாதிகார கோபுரத்தைச் சாய்ப்போம்" என்று கர்ஜித்து முடித்தார்.

- கௌசி

இரு கட்சிகளிடையேயும் தோழமை உணர்வு நிலவுகிறது. எங்களுக்குள் வேற்றுமை உணர்வும் ஏற்படும் என்று நான் நினைக்கவில்லை.

**வழக்கமாக செப்டெம்பர் 15ம் தேதி தி.மு.க. பிரம்மாண்டமான முப்பெரும் விழா நடத்தும். அதே தினத்தில் நீங்கள் சென்னையில் விழா நடத்துகிறீர்கள். இதன் மூலம் தி.மு.க.வுக்கு நீங்கள் உணர்த்த விரும்பும் 'செய்தி' என்ன?**

இது விஷமத்தனமான கேள்வி. ம.தி.மு.க. துவங்கப்பட்டதிலிருந்தே பெரியார், அண்ணா பிறந்த நாட்களையும், கட்சி துவக்க நாள் விழாவையும் கொண்டாடி வருகிறோம். 94ம் ஆண்டு மே மாதம் 6ம் தேதி ம.தி.மு.க. துவங்கப்பட்டது. அந்த வருடம் செப்டெம்பர் 15ம் தேதியே, 'எழுச்சி நடைப் பயண நிறைவு விழா' கொண்டாடினோம். தொடர்ந்து சிறப்பாகக் கொண்டாடி வருகிறோம்.

'96ல், '98ல், ஏன் நான் சிறையில் இருந்தபோதும் ம.தி.மு.க. செப்டெம்பர் 15ம் தேதி விழா நடத்தியது. ஆகவே உங்கள் கேள்வி அடிப்படையிலேயே தவறானது. இன்னும் வெளிப்படையாகவே பதில் சொல்கிறேன். வரும் சட்டமன்றத் தேர்தலிலும் இதே கூட்டணி தொடரும். மகத்தான வெற்றி பெறும்.

* நடைபயணத்தில் நல்லகண்ணுவுடன்...



- டி.வி.எஸ்.

படங்கள் : டிஜிட்டல் சண்முகம், ராஜன்

அட்டை படம் : குமார்



* செப். 15 விழா...

# மலர்களில் ராஜா!



தயாராகிறது...

# கல்கி

## தீபாவளி மலர் 2004

எண்பதே ரூபாய்க்கு ஒரு பொக்கிஷம்!



சந்தாதாரர் கல்கி தீபாவளி மலர் இலவசமாகப் பெற அதிரடி அறிவிப்பு... அடுத்த வாரம்...!

# "நான் தமிழ்நாட்டு மருமகள்!"

இப்படியொரு பரபரப்பு ஏற்படும் என்று சினேகா குடும்பத்தினர் எதிர்பார்க்கவேயில்லை. 'சினேகாவுக்கு விரைவில் திருமணம். மாப்பிள்ளை துபாயைச் சேர்ந்தவர்' என்று அதிரடிச் செய்தி வெளியாகி, அவரது ரசிகர்களை துன்பக் கடலில் ஆழ்த்தியது. "திருமணம் என்று ஒன்று நடந்தால், அது தமிழ்நாட்டில்தான். எனக்குக் கண்டிப்பாக தமிழ் நாட்டு மாப்பிள்ளைதான்" என்றெல்லாம் சுவையாய்ப் பேட்டியளித்தவராயிற்றே! இப்பொழுது தமிழ்நாட்டு இளைஞர்கள் மீது என்ன களங்கம் கண்டார் என்று துபாயில் ஓய்வெடுக்கச் சென்றிருந்தவரிடம் ஐ.எஸ்.டி. கால் செய்து வினவினோம். "ஐய்யோ சார், ஒரு கப்சா நியூஸுக்கு இத்தனை ஆர்வமா? நான் துபாயில் படிச்சு வளர்ந்தவ. என் அண்ணன்கள் ரெண்டு பேரும் இங்கதான் இருக்காங்க. அந்த பாசத்துல இங்க வந்து அப்படியே ஓய்வெடுத்தா, விடமாட்டீங்களே.." என்றவர் தொடர்ந்தார்.

"இது 200% கட்டுக்கதை. எனக்கு இப்பதான் 21 வயசாகுது. இன்னும் நாலைஞ்சு வருஷம் போனபிறகு தான் இன்னொருத்தருக்குக் கழுத்தை நீட்டுவேன். அப்புறம் இந்தச் செய்தியைக் கிளப்பிவிட்டது யாருன்னு தெரியும். அவங்களை நான் சும்மா விடப்போறதில்லை" என்று மிரட்டல் தொனியில் பேசியவரிடம் தொடர்ந்து உரையாடியதில் விழுந்த முத்தான வாக்கியம் : "தமிழ் நாட்டு மக்களும் அவர்கள் கலாசாரமும் ரொம்பவே பிடிக்கும். அதனால் கண்டிப்பாக நான் தமிழ்நாட்டு மருமகள்தான்!"

- ச.ந.



போஸ்ட்கார்டு
கதை

# அப்பாவின் வாசனை

கூடத்தில், உரித்த ஆரஞ்சு பழத்தோலாய்க் கிடத்தி வைக்கப்பட்டிருந்தார் அப்பா. நேற்றுவரை அப்பா... இன்று சடலம். யாரோ கொளுத்தி வைத்த அந்த மட்டரக பத்தியின் புகை மூக்கை நெருடியது. அப்பா, விலையுயர்ந்த சந்தன பத்தியை இலேசாகத் தண்ணீரில் நனைத்து பிறகு பொருத்தி வைப்பார். வீடு முழுக்க அந்த வாசனை அப்படியே விரவி இருக்கும். முல்லைப் பூ வெள்ளையில் வெளுத்த வேஷ்டி.... சந்தன கலர் முழுக்கை சட்டையை வெகு நேர்த்தியாக மடித்து உடுத்தியிருப்பார். மடித்துக் கட்டாத, தரையை உரசும் அந்த வேஷ்டியின் சலவை மணம் மனசை வருடும். அப்பா நல்ல மூடில் இருக்கும்போது, கொழுந்து வெத்தலை, சீவல் பாக்கு, பன்னீர் கலந்த சுண்ணாம்பு, ஒரு சேர அந்தக் கதம்ப மணத்தோடு வாய் மணக்கப் பேசுவதே அழகு.

அப்பா விட்டுச்சென்ற ·சொத்துக்களான நிலபுலன்கள், வீட்டுப் பத்திரங்களை என் அண்ணன்மார் இருவரும், தம்பி ஒருவனும் மறுநாளே பிரித்துக் கொண்டிருந்தனர். ஆனால், அப்பா விட்டுச் செல்லாத அந்த 'வாசனை' எனக்கே எனக்காய்!

சாத்தூர் சபாபதி

# குளிர்ச்சி தரும் குடும்ப ஃபார்முலா!

காலம் பரம்பரையாகக் காப்பாற்றப்பட்டு வரும் அழகு சாதன தயாரிப்புக் குறிப்புகள் நமது குடும்பங்களிலேயே உண்டு. குழந்தை பிறந்தால் வீட்டிலேயே மைகூட்டித்தான் கண்ணுக்கு இடுவார்கள். அரிசியைக் கருக வறுத்து நெற்றிக்குச் சாந்து தயாரிப்பார்கள். அர்ச்சனை செய்த மலர்களைக் காயவைத்து, வெந்தயம், சீயக்காய், பச்சைப் பயறு சேர்த்தரைத்து, ஸ்நானப் பொடி தயாரிப்பார்கள். செம்பருத்தி, மருதாணி சேர்த்து கூந்தல் தைலம்... கஸ்தூரி மஞ்சளுடன் சந்தனப் பொடி சேர்த்து முகத்துக்கு, என பார்த்துப் பார்த்துத் தயாரித்த காலம் மலையேறித்தான் விட்டது. இந்நிலையில் தந்தை வழி வந்த கூந்தல் தைல தயாரிப்பையும், குளியல் பொடி தயாரிப்பையும், வீட்டுக்குள் சிறிய அளவில் செய்து, விற்பனைக்குத் தருகிறார் மஹாலக்ஷ்மி. அவருடைய அப்பா, டாக்டர் ஜே.வியின் ஃபார்முலாப்படி அவர் தயாரிப்பவை :



• ஜே.வி. மஹாலக்ஷ்மி


கஸ்தூரி மஞ்சளுடன் சந்தனப் பொடி சேர்த்து முகத்துக்கு, என பார்த்துப் பார்த்துத் தயாரித்த காலம் மலையேறித்தான் விட்டது.


### மூலிகை தேங்காய் எண்ணெய் :

இருபத்திரண்டு வகை பச்சைக் கீரைகள், காயவைத்த ஆயுர்வேத மூலிகைகள் (கொட்டைப் புல், சில மலர்கள், வேங்கை மரத்து வேர்) இன்னும் பல மருந்துப் பொருள்கள், பசும் பால், எருமைப் பால், தேங்காய்ப் பால், அரச மரத்துப் பால்... இவற்றைச் சரியான விகிதாசாரத்தில் கலந்து, நெல்லிச்சாறு, அருகம்புல் சாறு சேர்த்து, இரும்பு அண்டாக்களில் ஒரு குறிப்பிட்ட கால அளவுக்கு வைத்திருந்து, தேங்காய் எண்ணெயில் சேர்த்துக் காய்ச்சி, வடிகட்டி, இரும்புப் பாத்திரங்களில் பத்திரப்படுத்துகிறார்கள். தலை முடி பிரமாதமாக வளரும் என்கிறார்கள்.

### மூலிகை ஸ்நான தைலம் :

இதுவும் மேற்சொன்ன வகையிலேயே நல்லெண்ணெய் அல்லது தேங்காய் எண்ணெய், அல்லது வேறு எண்ணெயோடு சேர்த்துக் காய்ச்சப்படுகிறது. மைக்ரெய்ன் தலைவலி நீங்கும். உறக்கம் கொடுக்கும். வாரம் இருமுறை தேய்த்துக் குளித்தால் நல்ல ஆரோக்கியம் + அழகு; மிதமான குளிர்ச்சி. குளிப்பதற்கு மூலிகைப் பொடியைப் பயன்படுத்தலாம்.

### மூலிகை குளியல் பொடி :

இதன் சேர்க்கை பரம ரகசியம்! பயன்படுத்தியவர்கள் அதிருப்தியடைந்ததில்லை. சரும அழகுக்கும், ஆரோக்கியத்துக்கும் நல்ல பாதுகாப்பு.

### ஆயுர்வேத ஆரஞ்சு எண்ணெய் :

எலுமிச்சை எண்ணெய், சந்தன எண்ணெய், பாதாம் எண்ணெய், குங்குமப்பூ, வைட்டமின் ஈ எண்ணெய், தேங்காய் க்ரீம் சேர்த்துக் காய்ச்சி வடிகட்டியது. பிறந்த குழந்தைக்குக் கூட பாதுகாப்பானது.

- அழகி

# கண்ணாடிக் கல்வெட்டுகள் 16

ஒரு புல் என்பது
பூமியின் அனுபவம்!
ஒரு பூ என்பது
மரத்தின் அனுபவம்!

அனுபவம் என்பது
ஆயுர்வேதக் கடைசல்!

கடலில் கலக்கும்
ஒரு நதித்துளி
எத்தனை தூரத்தை தன்
அனுபவத்தால் கடந்திருக்கும்!

விண்ணில் சஞ்சரிக்கும்
வடிவமில்லா மேகம்
எத்தனை உயரத்தை தன்
அனுபவத்தால் உணர்ந்திருக்கும்!

ஆடு மேய்த்தல் - இலை பொறுக்குதல்
பூப்பறித்தல் - விண்மீன் எண்ணுதல்
ஊஞ்சலாடுதல் - கீழே விழுதல் - என
வாழ்க்கையின் ஒவ்வொன்றிலும்
அனுபவம் கிடைக்கும்

அனுபவம் பெற்ற மனம்
எழுதிய புது ஓலைச்
சுவடிகளைப்போல!

மனிதனுக்கு மட்டுமல்ல
மண்ணுக்கும் சிலபோது
அனுபவங்கள் கிடைக்கும்!

மயிலாடுதுறையிலிருந்து
கூப்பிடும் தூரத்தில் உள்ளது
தேரழுந்தூர்!

செம்மண் கப்பிகளும்
செழிப்பான வரப்புகளுமாய்
காவிரிக்கும் - மஞ்சளாற்றுக்கும்
இடையே உள்ள இடம்!

"அப்பா! நம் ஊரை
அழுந்தூர் என்றே பாடுகிறார்
திருமங்கை மன்னன்!

அப்படியாய் இருக்க
அழுந்தூர்
தேரழுந்தூர்
ஆனதெப்படி?"

குறுகுறு என்ற குமிழ்நெருப்புக்
கண்களோடு
மண்பாண்டங்களை விளையாடியபடி
கேள்வி கேட்டான் அந்தச் சிறுவன்

கவிஞானி

குழந்தைகள் - அறிவாளியாவதும்
அறிவிலியாவதும்
பெற்றவர் சொல்லும்
பேருரைகளிலேதான் உள்ளது!

வருங்காலத்தை - ஒரு
தமிழ்க்காலமாக மாற்றப்போகும்
அந்தச் சிறுவனின் வினாவிற்கு
அகம் திறந்தார் அப்பெரியவர்!

தமிழ் மொழியின்
தலையெழுத்தில் புதிய
அத்தியாயக் கீற்றை எழுதவிருந்த
அவன் பிஞ்சு விரல்களைப்
பற்றிக் கொண்டார்!

காப்பியங்களை கௌரவித்து
காவியங்களின் தலைவனாக இருந்த
அந்த பாலகனின் முகத்தில்
அழுந்த முத்தமிட்டார்!

இலக்கியமும் - ஆன்மிகமும்
சங்கத் தமிழ் சர்க்கரை வயலாய்
சமமாக சமைக்கவிருந்த
அந்த மழலையின் மடியில்
தலை சாய்ந்து கொண்டார்!

சொன்னார்!

"மகனே!
மாம்பூவின் நுனிபோல
இளமென்மை உடையவனே!

அழுந்தூர் என்றுதானப்பா

அழைக்கப்பட்டது இவ்வூர்
முன்னொரு காலத்தில் -
மூவுலகும் ரட்சித்த திருமால்
மண்ணுக்கு வந்தான் மன்னனாக...!

# ஜனனம்-1

அவதாரப் பெயரோ கண்ணனாக!

ஆயர்பாடியில்
கோபியருடன்
ஆடிப்பாடி

'ஆ' என்றவர்களை
அலற வைத்து
ஆவினம் பசுமையில்
மேய வைத்தான்
அந்த
மாயவன்!

குழலூதிக்
குழலூதியே



கொக்கியிட்டு இழுப்பான் அந்த
குணாளன்!

ஏய்ப்பதும் - பசு
மேய்ப்பதும் - அவனுக்குப்
பிடித்த தொழில்!

கிருஷ்ணனோடு கொஞ்சம்
கிண்டலாட நினைத்த
பிரம்ம தேவன்!
கிருஷ்ணன் மேய்த்த பசுக்களை
அழுந்தூரில் அடைத்து வைத்தான்!

பசுக்களைத் தேடி வந்த
பௌர்ணமிக் குமாரன்
பசுக்களை மீட்டான்!
பிரம்மனை கேள்வி கேட்டான்!

அழுந்தூரில் கிட்டிய
ஆவினத்தை ஓட்டிய
மதுசூதன் கண்டான்
ஒரு
மாயக் காட்சியை...

உபரிசரவசு என்ற
உல்லாசபுரி வேந்தன்
ஒரு தேர்
வைத்திருந்தான்!

மனிதனில் மூவகை உண்டு!
இல்லாததையே எண்ணி
இருப்பதை மறப்பவன்!
இருப்பதைக் கொண்டு
இனிமையாய் இருப்பவன்!
இரக்கமற்ற செயலால்
இருப்பதை இழப்பவன்!

உபரிசரவசு மூன்றாம் வகை!

ஊர் வைத்திருந்தும்
ஊரைவிடப் பெரிய
சீர் வைத்திருந்தும்
சீரைக் காப்பாற்ற
போர் வைத்திருந்தும்
போரில் வென்று பல
பேர் வைத்திருந்தும்

**பா. விஜய்**



விண்ணில் பறக்கும் ஓர்
தேர் வைத்திருந்தான்!

அவன் தேர் பறக்கும்!
தேர் நிழல்படும் இடமெல்லாம்
பூமியிலே கொதிக்கும்!
தேர் நிழல் பட்ட ஜீவனெல்லாம்
பாவப்பட்டு துடிக்கும்!

இது அவன் பெற்ற வரம்!
அவன் அறம் அறியா
மரம்!

உபரிசரவசு
உலா வந்த தேர்
பறந்து பறந்து படுத்தியது!
பறந்து பரந்து படுத்தியது!

கிருஷ்ணனின்
கதிர்காந்தக் கண்களுக்குள்
விண்ணிலே உபரிசரவசு
விரையும் காட்சி விழுந்தது!

உபரிசரவசுவின் தேர்
உயர்ந்த முகில் தெருவில்
உரசி உரசிப் பறந்தது!

தேரின் நிழல்
பூமியில் திரிந்த உயிரினங்கள் மேல்
புல்லாய்ச் சீறிப் படிந்தது!

நிழல்பட்ட அஃறிணை - உயரிணை
அலறிக் கீழே சரிந்தன!

கண்ணனின் கோபம்
மன எல்லை தாண்டி
மலைமலையாய்க் குவிந்தது!

தேரின் நிழல்
கோவர்த்தன மலையையே
குடையாய்ப் பிடித்த
கோகுல மைந்தனருகே வர!...

கண்ணன் தன் கால்களின்
சுட்டை விரலால்
தேர் நிழலை அழுத்த...

உபரிசரவசுவின்
ஆனந்தத் தேரும்
அடங்காத ஆணவமும்
பூமியில் விழுந்து புதைந்தன!

அந்த காளிங்க நடனதாரி
அழுந்தூரில் தேரை அழுத்திய
திருக்காட்சியின் நினைவாக
அழுந்தூர் என்னும் இவ்வூர்
தேரழுந்தூர் ஆனதப்பா!" என்று
கூறி முடித்தார் தந்தை!

கேட்ட மகனோ நெகிழ்ந்தான்!
மண்ணின் பெருமையில் மகிழ்ந்தான்!

அந்தச் சிறுவனுள்
எண்ணியதை எழுதும்
சக்தி பிறந்தது!
ஏகம்பவாணன் மேல்
பக்தி பிறந்தது!

ஒரு மண்பாண்டம் செய்யும்
குயவனின் மகன்தான்
பின்னாளில்
முத்தமிழ் காண்டம் செய்யப்போகும்
மகாகவிஞன் எனத் தெரியாமல்
தேரழுந்தூர் இருந்தது!

இந்தப் பிரபஞ்சத்தையே
நிரப்புமளவு
கவிதை செய்யப்போகும்
கவிச்சக்கரவர்த்தி என்றறியாமல்

கூழ் குடித்துக் குழிபறித்துக்
குளம் குதித்து மண் பிசைந்து
வளர்ந்தது அந்த
வசீகரக் கவிக்கடல்...!

(தொடரும்)



ஒன்பது மாதத் தடங்கல்களைத் தாண்டி ஜெயலலிதாவின் இரண்டு சொத்துக் குவிப்பு வழக்குகளும் சுறுசுறுப்பு அடைந்துள்ளன. ஆகஸ்ட் கடைசி வாரம் சென்னை வந்தது ஒரு கர்நாடக டீம். ஐந்து நபர்கள்கொண்ட அந்த குழுவுக்கு, கர்நாடகாவைச் சேர்ந்த மாவட்ட நீதிபதி வெங்கடேஷ் தலைவர். சென்னையிலிருந்து, ஜெ. மீதான சொத்துக் குவிப்பு வழக்குகள் சம்பந்தப்பட்ட ஆவணங்கள் அனைத்தும் சரி பார்க்கப்பட்டபின், பதினெட்டு பெட்டிகளில் சீல் வைக்கப்பட்டன.



# ஆஜர்... ஆஜர்... ஆஜர்...

சென்னையிலிருந்து புறப்பட்ட டீம், பெங்களூர் திரும்பும்போது அதிகாலை நேரம்.

பெங்களூரில் வழக்கு சம்பந்தப்பட்ட ஆவணங்கள், சிட்டி சிவில் கோர்ட் வளாகத்தில் அமைக்கப்பட்டுள்ள சிறப்பு நீதிமன்ற அலுவலகத்தில் பத்திரமாக வைக்கப்பட்டன.

ஆவணங்களில் பல தமிழில் இருப்பதால், அவற்றை மொழிபெயர்ப்பு செய்யும் வேலை ஆரம்பித்துள்ளது. பெங்களூர் நகரத்தில் உள்ள பல்வேறு கல்லூரிகளில் பணியாற்றும் இருபது ஆசிரியர்களும், பேராசிரியர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர். இவர்களின் பின்னணி, அரசியல் ஆர்வம் ஆகியவற்றை விசாரித்து, விருப்பு, வெறுப்பு இல்லாமல் மொழிபெயர்ப்புப் பணியை செவ்வனே செய்து முடிப்பவர்களாக, இருபது பேர் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர். இந்த மொழி பெயர்ப்பு பணியில் ஈடுபட்டுள்ளவர்கள் அனைவரும் தமிழ், ஆங்கிலம், கன்னடம் ஆகிய மூன்று மொழிகளிலும் நல்ல புலமை பெற்றவர்கள், மொழிபெயர்ப்பு அனுபவம் கொண்டவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

கர்நாடகாவில் விசாரணை ஆரம்பமாகாமல் தாமதமானதற்கு இன்னொரு காரணம், அரசு வழக்கறிஞர் நியமனத்தில் ஏற்பட்ட சிக்கல். கர்நாடக முதல்வர் தரம்சிங், கர்நாடக உயர்நீதிமன்ற தலைமை நீதிபதி என்.கே. ஜெயினுடன் தொடர்ந்து ஆலோசனை செய்து, கடைசியில் பப்ளிக் பிராசிக்யூட்டராக தேவராஜனை நியமனம் செய்ய முடிவு செய்யப்பட்டது.

ஆக, சுப்ரீம் கோர்ட் உத்தரவுப்படி தமிழ்நாட்டிலிருந்து கர்நாடகாவுக்கு மாற்றப்பட்ட வழக்குகளின் விசாரணை மீண்டும் ஆரம்பமாகிறது. ஆஜர்... ஆஜர்... ஆஜர்!

- நமது நிருபர்



* 'நாம தேவலை!'





## லேடீஸ் ஹாஸ்டல்

# பாவம் குரங்குகள்!



* [illegible]

"எங்க ஐ.ஐ.டி லேடீஸ் ஹாஸ்டலுக்குள் ஆண்கள் வாசத்தைக்கூட அனுமதிக்க மாட்டார்கள். ஆனா பாருங்க, இப்போவெல்லாம் குரங்கில்ல குரங்கு. அது எங்க ரூமுக்குள்ள வந்து அட்டகாசம் பண்ணிக்கிட்டிருக்கு. லேடீஸ் ஹாஸ்டலுக்குள்ள அதுக்கென்னங்க வேலை? வந்து கேக்கறீங்களா" - அழாத குறையாய் நமக்கு வந்த புகாரைக் கண்டவுடன், ஒரே தாவாகத் தாவி சென்னை ஐ.ஐ.டி.யைச் சென்றடைந்தோம்.

அட, 'வால் பையன் என்பது நம்

“பெரும்பாலும் நைட் இரண்டு மணிக்குத்தான் ரூமுக்குத் திரும்புவோம்”





அக்கம் பக்கத்து வீடுகளுக்குத்தானே தெரியும்... இவர்களுக்கெப்படி?” அதிசயமாக நம்மையும் உள்ளே விட்டுவிட்டார்கள். நானூறு லஜ்ஜாவதிகள் தங்கிப் படிக்கும் ‘ஷராவதி’ விடுதிக்குள் நுழைகிறோம். ‘ஆடம் டீசிங்’ ஏதும் செய்துவிடமாட்டார்களே... குழம்பிக்கொண்டே படிகள் ஏறியபோது, ஒற்றை ஆளாய் தைரியமாய் நம்மைத் தாண்டிச் சென்று கொண்டிருந்தார் மிஸ்டர் குரங்கார்.

“பார்த்திங்களா, பார்த்திங்களா... என்ன தைரியம் இதுக்கு! இப்படித்தான் நேத்து நான் குளிச்சிட்டு வெளிய வரேன்... என் பெட்ல கூலா உட்கார்ந்து பொடேடோ சிப்ஸை சாப்பிட்டுக்கிட்டிருக்கு. சில நேரம் கட்டிலுக்கடியில எல்லாம் ஒளிஞ்சுக்கும்” பாவம், அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை வினிதாவிற்கு.

பொதுவாக இதர கல்லூரிகளில் ஆண்கள் மற்றும் பெண்கள் விடுதி



களுக்குமிடையே குறைந்தபட்சம் ஆயிரத்து தொண்ணூற்றியெட்டு புள்ளி மூணு மீட்டர் தூரமாவது இடைவெளியிருக்கும். ஆனால் இங்குள்ள பால்கனியிலிருந்து பார்த்தால், எதிரேயுள்ள மாடியில் பவர் கிளாஸ் போட்ட சில மாணவர்கள் நடந்தபடி படித்துக் கொண்டிருப்பது தெரிகிறது. "அதாங்க ஜெண்ட்ஸ் ஹாஸ்டல். ஆனா அதுக்குள்ள நாங்க எப்ப வேண்டுமானாலும் போகலாம். காரணம், முதல் வருட அப்ளிகேஷன் ஃபார்மில், 'ஆண்கள் ஹாஸ்டலுக்கு வர வேண்டாம்' என்று நாங்கள் குறிப்பிடுவோம். அவங்க விவரமா அதை ப்ளாங்க்கா விட்டுடுவாங்க" என்ற ஷ்ரபோனியின் புன்னகை புதிதாய்த்தானிருந்தது. (ஹீரோயின்களுக்குப் பெயர் சூட்டத் தடுமாறும் இயக்குனர்கள் கவனிக்க!)

"வாவ், எங்க வாங்கினீங்க" என்று கேட்கத் தூண்டும் கலர்மிகு டி.ஷர்ட் - ஜீன்ஸில் இருந்தார் அன்ஷு. "தமிழ் நாட்டிலேயே இங்க மட்டும்தான் எந்தவித நேரக்கட்டுப்பாடும் கிடையாது. க்ளாஸ் பசங்களோடு க்ரூப் ஸ்டடி பண்ணிட்டு, பெரும்பாலும் நைட் இரண்டு மணிக்குதான் ரூமுக்குத் திரும்புவோம். கேட்க ஆள் கிடையாது"

"சரி, ஹாஸ்டலிலுள்ள நானூறு பெண்களும் ஒருவேளை ஒன்று கூடினால், எதைப் பற்றிப் பேசுவீர்கள்?" கொக்கி போட்டோம். தயங்காமல் ஒத்துக் கொள்கிறார்கள். "கண்டிப்பா பசங்களைப் பத்தித்தான்! ஐ.ஐ.டி. பசங்க அதி புத்திசாலிங்க. கனவுல எழுப்பினாக்கூட பக்காவா ப்ரோக்ராம் எழுதுவாங்க. எல்லாம் ரைட்தான். ஆனா, பழகுறதுல பேசறதுல எல்லாம் சரியான பேக்குங்க. இதுல தானா வந்து, தத்தக்கா பித்தக்கான்னு உளறுபவனை எங்களுக்குப் பிடிக்காது. நாங்க ஆசை ஆசையா பேசலாம்னு நினைக்கிற பையன், எங்ககிட்ட பேச மாட்டான். ப்ச்!"

அடடா, பெண்களுக்குத்தான் இம்மானுட வாழ்க்கையில் எத்தனை விதமான கஷ்டங்கள்!

போனால் போகிறதென்று ஹாஸ்டல் டே அன்று வருடத்திற்கு ஒருநாள் ஆண்களை உள்ளே விடுகிறார்கள். "பட்டிக்காட்டான் மிட்டாய்க் கடையில நுழைஞ்ச மாதிரிதான், 'ஆ'ன்னு பிரமிச்சுப் போயிடுவாங்க" - இது அனிதா. (ஆத்தா இது ரொம்பத்தான்!)

போட்டோசெஷன் ஆரம்பித்த போது வளர்ந்த வாண்டுகள் அனைத்தும் டிஜிடல் காமிராவுக்கு டிசைன் டிசைனான அனுபவம் கொடுத்தன. பாவப்பட்ட மதுமிதாவை இருபுறமும் அலேக்காகத் தூக்கி ஊஞ்சலாடினர். வரிசைக்கிரமத்தில் உட்கார்ந்து ஊளை விட்டபடி ரயில் விட்டார்கள். ரம்யாவோ, தலை கீழாக நிற்கவும் ரெடியாயிருந்தார். பாவம் குரங்குகள், எப்படித்தான் இந்த வானரங்களை நாள்தோறும் சமாளிக்கின்றனவோ.

"சரி, எதிரேயே அர்னால்ட்களும், ஜாக்கிசான்களும் இருக்கிறார்களே, அவர்களைக் கொண்டு குரங்குத் தொல்லைகளைச் சமாளிக்கலாமே" என்றதுதான் தாமதம். அடிக்கவே வந்துவிட்டார்கள். "நல்லாச் சொன்னீங்க போங்க. அதுங்களுக்கு இதுங்களே தேவலை. நீ வாடா செல்லம்" என்றபடி, அதுவரை சிவனே என்று ஒரு மூலையிலிருந்த குரங்கை நோக்கி கோரஸ் கத்தலோடு ஓடிப் போக, பாவம் அது, தன் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு ஓட ஆரம்பித்தது.

- ச.ந. கண்ணன்

படங்கள்: வித்யன்

# இசையின் வயது - 75



**பா**லிவுட்டையே எதிர்பார்ப்பில் காக்க வைத்துக் கொண்டிருக்கும் படம் 'வீரா ஷரா.' ஷாருக்கான், அமிதாப், ப்ரீத்தி ஜிந்தா ஆகியோர் நடித்து வரும் இந்தப் படத்தின் பாடல்களைக் கேட்டு அசந்து போன அமிதாப்பச்சன், ''பாடல்களைப் பாடிய அந்த டீன்ஏஜ் பாடகி யார்?'' என்று கேட்டதற்குக் கிடைத்த ஆச்சர்ய பதில் - 75 வயது லதா மங்கேஷ்கர்!

இந்திய இசை வானில் சிறகடித்துப் பறக்கும் இந்தக் குயில் இதுவரை இருபது இந்திய மொழிகளில் (1948 முதல் இன்று வரை) நாற்பதாயிரத்திற்கும் அதிகமான பாடல்களைப் பாடி கின்னஸிலும் இடம் பிடித்திருக்கிறது.

இத்தனைப் பெருமைகளையும் உள்ளடக்கிய லதா மங்கேஷ்கர், வரும் செப்டெம்பர் 28ம் தேதியன்று தமது 'பவள விழா' பிறந்தநாளைக் கொண்டாட விருக்கிறார்.

தனது குரல் இனிமையால் இசை சாம்ராஜ்யத்தை ஆட்சி செய்துவரும் லதா, சினிமாவில் நடிக்கவும் செய்திருக்கிறார்.

ஆடியோ கம்பெனி ஒன்றை நடத்தி வந்த லதாவின் தந்தை தினாநாத் மங்கேஷ்கர் லதாவுக்குப் பதினான்கு வயது ஆனபோது இறந்துவிட்டார். ஆகவே குடும்பச் சுமையைக் குறைப்பதற்காக, ஹிந்தி, மராத்தி என எட்டுப் படங்களில் நடித்தாராம்.

இங்கே சகுனப் பிரியர்களுக்கு ஒரு நற்செய்தி என்னவென்றால், இவர் 1942ல் 'கிதிஹஸல்' என்கிற மராத்தியப் படத்தில் பாடிய பாடல், எடிட்டிங்கில் தூக்கியெறியப்பட்டு உருவான சுவடேயில்லாமல் காற்றில் கரைந்து போயிருக்கிறது.

சாதனைப் பெண்ணான லதா மங்கேஷ்கரின் பிறந்தநாளை முன்னிட்டு, 'லதா வாரம்' என்று தொடர்ந்து ஏழு நாட்கள் கொண்டாட்டங்களை நடத்தப் போகிறது பாலிவுட்!

இந்திய அரசின் மிக உயரிய விருதான 'பாரத ரத்னா' பெற்ற இவரது ஆதர்ச கனவு பிரம்மாண்டமான மருத்துவமனை கட்டுவது! சமீபத்தில் அந்த ஆசையும் நிறைவேறியிருக்கிறது.

தனது பிறந்தநாள் பற்றி இவர் குறிப்பிடுகையில், ''வயதில்தான் நான் 75! உணர்வுகளில் இன்னமும் 25தான்'' என்கிறார்.

- எழில்



# சிக்குனு பாட... பக்குனு முதல் டேக்!

'கண்பட்டுப் போச்சப்பா!' என உச்சுக் கொட்டுகிறார்கள் விவேக் ரசிகர்கள். விவேக் ஹீரோவாக அறிமுகமாகும் 'சொல்லியடிப்பேன்' படத்தின் சேசிங் காட்சியில் விபத்து. தசை நாண் புரண்டு சிகிச்சை எடுத்துக்கொண்டிருந்த விவேக்கைக் கண்டுபிடித்து, 'ஆக்ஷன் ஹீரோ அவதாரம், இப்படி ஆபத்தில் முடிந்துவிட்டதே' என்று வாயைக் கிளறினோம்.

"அடப்பாவிகளா! ஆறுதலா ரெண்டு வார்த்தை சொல்றதை விட்டுட்டு இப்படி துக்கம் விசாரிக்க வந்துட்டீங்களே?" என்று ஜூனியர் எம்.ஆர்.ராதா போல மிமிக்ரி செய்ய, அடுத்த நொடி அங்கே சிரிப்பு வெடி.

"உடல் பலத்தைக் கொண்டு மோதுவது, மூளை பலத்தைக் கொண்டு மோதுவதுன்னு ஆக்ஷனில் இப்படி இரண்டு வகை இருக்கு. இதில் இரண்டையுமே நான் பண்றேன். ரசிகர்கள் என்கிட்டே எதை எதிர்பார்த்து வருவார்களோ, அந்த கலகலப்பு காமெடி, முதல் பாதியில் இருக்கும். இரண்டாவது பாதியில் விஸ்க்... விஸ்க்... என்ற

சவுண்ட் எஃபெக்ட் பின்னணியில் சீனுக்கு சீன் 'பன்ச்' டயலாக் பேசி, வில்லன் கோஷ்டியைப் பந்தாடுவேன். ஆனால் முழுக்க முழுக்க இது இயக்குனருக்கான படமா இருக்கும். இந்தப் படம் வெளிவந்ததும் உங்க விவேக், புதிய கலரோடு வெளியே வருவான் பாருங்க" என்று ஷாக் கொடுக்கும் விவேக், 'சொல்லியடிப்பேன்' படத்தில் ஒரு பாடலையும் பாடியிருக்கிறார்!

'சிக்குனு கிறியே! எனக்கு பக்குனு கீதுமா?' என்று படத்தின் இயக்குனர் எஸ்.ஏ.சி. ராம்கி கொண்டு, விவேக் அடிக்கடி உபயோகப்படுத்தும் பிராண்டட் வார்த்தைகளைக் கொண்டு சென்னைத் தமிழில் முழுப் பாடலையும் எழுதியிருக்கிறாராம் பாடலாசிரியர் கலைக்குமார். ஆரம்பத்தில் மறுத்த விவேக், பிறகு ஒரே டேக்கில் தேவா இசையில் பாடி அசத்தியிருக்கிறார்!

வெளிநாட்டுப் பனிமலைகளின் அடிவாரங்களில் மாங்கு மாங்கென்று ஆட்டம் போடாவிட்டாலும், உள்ளூரிலேயே விவேக் - சாயாசிங் ஜோடி டூயட் ஆடப்போகிறது என்கிறார் இயக்குனர். விவேக்கை காமெடியனாக நடிக்க வைத்து நல்ல விலைக்கு விற்று வந்த தயாரிப்பாளர்கள், ஏற்கெனவே



(எஸ்.ஏ.சந்திரசேகரிடம் உதவி இயக்குனராகப் பணிபுரிந்து, குருபக்தி காரணமாக அவரது மூன்று இனிஷியல்களைத் தமது பெயருக்கு முன்பாகச் சேர்த்துக் கொண்டிருக்கிறார்!) சொன்ன பாடலின் முதல் வரியை வைத்துக் அவரை ஒரு ஹீரோ ரேஞ்சுக்கு தூக்கி வைத்திருக்கிறார்கள். இப்போது நிஜமாகவே ஹீரோ வேஷம் கட்டியிருக்கும் விவேக், சொல்லியடிப்பேன் என்று களத்தில் இறங்கியுள்ளார்.

**- ரவுண்ட்ஸ் பாய்**

# செம்மொழியில்



பெண்களின்
அழுகையில்
சீரியலைக் காணலாம்.

கஷ்டம் வரும்
பின்னே; கல்யாணம்
வரும் முன்னே!



தண்ணீர்
உள்ளபோதே ஊற்றிக்
கொள்!






'NET'டற்ற வாழ்வே
மட்டற்ற செல்வம்!

- வீ. விஷ்ணுகுமார்



டால்பி, டிடிஎஸ்ஸை
வியப்பார்,
மனைவியின் சவுண்டைக்
கேளாதார்!



சிரங்கு புடிச்சவன் கையும்,
செல் வெச்சிருக்கிறவன்
கையும் சும்மா இருக்காது!

# சமீபத்திய முத்துக்கள்!




ஏழை சொல் சுப்ரீம்
கோர்ட் ஏறாது!



அரசன் அன்றே
கொல்வான்; மெகா
சீரியல் நின்று
கொல்லும்!

# நியாயமா ஞானம்?



• பாம்பே ஞானம்

'என்ன இருந்தாலும் பாம்பே ஞானம் இப்படிச் செய்திருக்கக் கூடாது' என்று பொருமுகிறார்கள், விஜய் டி.வி. நேயர்கள்.

பாம்பே ஞானம் உள்ளிட்ட மூவர் கூட்டணி, சினிமா செய்திகளை நகைச் சுவையாக(?) அலசும் 'சினிமா காரம் காபி' என்ற நிகழ்ச்சியால்தான் ஞானத் துக்குக் கண்டனக் கணைகள்! "செப் டெம்பர் இரண்டாவது வார நிகழ்ச்சியின் முதல் பாதியில், 'நியூ' படத்தில் கிரண் பாத்திரம், பிராமணப் பெண்களை இழிவுபடுத்தும் விதமாக சித்திரிக்கப்பட்டி ருப்பதை, பாம்பே ஞானம் கடுமை யாக விமர்சிக்க, மற்ற இருவரும் அதற்கு சப்பைக்கட்டு கட்டினார்கள். இரண்டாவது பாதி அரட்டை நடந்து கொண்டிருக்கும் போது, 'நியூ' படத்தின் இயக்குனர் எஸ்.ஜே. சூர்யா, எதிர்பாராத சிறப்பு விருந்தினர் போல, நிகழ்ச்சிக்குள் தொப்பென்று வந்து குதித்தார். (எல்லாம் ஒரு செட்-அப்தான்!) அதுவரை சூர்யாவை தாக்கிப் பேசிக்கொண்டிருந்த பாம்பே ஞானம், அடுத்த நொடி அந்தர் பல்டியடித்து, சூர்யாவைப் புகழ்ந்து தள்ள, காரம் நிகழ்ச்சி கோர நிகழ்ச்சி யாகிவிட்டது.

"நியூ படத்தில் பெண்களை இழிவு படுத்தியது போதாதென்று, இந்த நிகழ்ச்சிக்கு வந்து மேலும் இழிவுபடுத்தி விட்டுக் கிளம்பினார் இயக்குனர் சூர்யா. அப்படிப்பட்ட நிகழ்ச்சியில் 'சூர்யா வருவார்னு தெரிந்திருந்தால், நான் முன்னமே மேக்-அப் போட்டுண்டி ருப்பேன்' என்று மடிசாரில் தோன்றிய பாம்பே ஞானம் பேசியது, மிகவும் கேவலம்" என்றும் குமுறுகிறார்கள் நிகழ்ச்சியைப் பார்த்தவர்கள்.

புதிய நாடக ஒத்திகையில் இருந்த பாம்பே ஞானத்திடமே இது குறித்துக் கேட்டோம்.

"அந்த நிகழ்ச்சியில் நான் அம்புஜம் மாமி என்கிற கேரக்டரில் வருகிறேன். அன்றைய நிகழ்ச்சியில், இயக்குனர் சூர்யா படத்தின் நிறை, குறை இரண் டையுமே சுட்டிக் காட்டினோம். எனது அம்புஜம் கேரக்டர், இயக்குனரைப் பார்த்ததும் கொஞ்சம் எக்சைட் ஆகிற மாதிரி அமைக்கப்பட்டிருந்தது உண்மை தான். பொதுவாக நமது விமர்சனத்துக்கு ஆளாகிறவர்கள், நம் எதிரே வந்து நின்று 'ஹலோ' சொல்லும் போது, அவர் செய்த தவறை மறந்துவிட்டு 'ஹாய்' சொல்ற தில்லையா? அது மாதிரி எல்லோருக் குள்ளும் இருக்கும் அந்த இயல்பான குணத்தைத்தான் அன்று எனது கேரக் டர் பிரதிபலித்தது. அந்த நிகழ்ச்சியில், அம்புஜம் மாமி என்கிற கேரக்டராகத் தான் என்னைப் பார்க்க வேண்டுமே தவிர, பாம்பே ஞானமாக இல்லை" என்றார்.

விமர்சனத்தைப் போல் விமர்சகர் களும் நடுநிலையாளர்களாகத்தானே இருக்க வேண்டும்? எஸ்.ஜே. சூர்யா விடம் காரமாக நாலு கேள்வி கேட் பதற்குப் பதில், ஸ்வீட்டாகவே பரிமாறித் தள்ளினால், 'நியூ'வின் கொடியைத் தூக்கிப் பிடிப்பதாகத்தானே இருக்கிறது!

- ஜோ

# செல்லமே

சீதை மாதிரி ஓர் அழகான பெண்ணைக் காதலித்துத் திருமணம் செய்து கொண்டால், இராவணன் மாதிரி ஒரு வில்லனின் குறுக்கீடு இருக்கக் கூடும். 'செல்லமே' படத்திலும் இராவணன் உண்டு. ஆனால் அவன் சீதையின் மடியிலேயே வளர்ந்த, பதினாறு வயது அடலசண்ட்.

பழம்பெருமை மிக்க இராமாயணக் கதையின் அவுட்லைனை எடுத்துக் கொண்டு, அதற்குச் சமகாலப் பின்னணியில் அமைந்த சுவாரஸ்யக் கதைக் களம், வலுவான சம்பவங்கள், பிசிறில்லாத பாத்திர அமைப்பு, குளறுபடியற்ற கோர்வையான திரைக்கதை என்று ஜமாய்த்திருக்கிறார் இயக்குனர்.

முக்கியமாக ரீமா - பரத் இடையிலான உறவைக் கொச்சைப்படுத்தி விடாமல் நாகரிகம் காத்திருக்கும் ஏ.ஆர்.காந்தி கிருஷ்ணா, முதல் தர இயக்குனருக்கான முகத்தைக் காட்டுகிறார்.

பாடல் காட்சிகளின் போது கட்டாயம் கேன்டீன் பக்கம் போய் வரலாம் என்ற அனிச்சையான சிந்தனையைக்கூட மறக்கடித்து, இருக்கையிலேயே நம்மை இருத்தி வைக்கின்றன, கதையோடு நேர்த்தியாக கைகோத்துக் கொண்டிருக்கும் பாடல்கள்.

கடத்தி வரப்பட்டு வீட்டுச் சிறையில் கதாநாயகி மருளும் தருணத்தில், ஒரு ரொமான்டிக் பாடலைத் திறமையாக உள்ளீடு செய்திருக்கிறார் இயக்குனர். மனிதக் காலடி படாத அந்தமானின் இயற்கையை அப்படியே பருகி வந்து, நம்மை ஐஸ்கட்டியாய் உருக வைத்து விடுகிறது, கே.வி.ஆனந்தின் கதை சொல்லும் கேமரா.

அறிமுக ஹீரோ என்று சொல்ல முடியாதபடி முதல் படத்திலேயே வெகு இயல்பாக உணர்ச்சிகளை வெளிப்படுத்தியிருக்கும் விசாலுக்கு ஒரு சூப்பர் வெல்கம். "காந்தியை விட கஸ்தூர்பாவுக்கு வயசு அதிகம். சச்சினை விட அவர் மனைவிக்கு ஐந்து வயது அதிகம். நான் மட்டும் உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளக் கூடாதா?'' என்று கேட்டு அடம் பிடிக்கும் குழந்தை வில்லனாகப் பின்னுகிறார் பரத். 'நான் வெறும் கிளாமர் பொம்மையில்லை. நடிப்பிலும் ஒருகை பார்ப்பேன்' என்று சிம்ரன் வழியில் ரீமாசென்.

பாடல் வரிகளை வருடிக் கொடுத்து, காட்சிகளுக்கு உயிரூட்டும் ஹாரிஸ் ஜெயராஜின் இசை மற்றும் பின்னணி இசை, படத்திற்கு முத்தாய்ப்பு.

திறமையான டீம் கிடைத்தால் பழைய கதையைக் கூட 'பளிச்'சென்று புதிதாகக் கொடுக்கலாம், என்று சொல்லாமல் சொல்கிறது 'செல்லமே' கூட்டணி.

\- விஷுவல்தாசன்

● அபவ் ஆவரேஜ்

# சண்டைக் கோழி சர்ச் என்ஜின்கள்!

இங்கிலீஷ் தெரியாத ஜப்பான்காரர்கள் செய்யும் பிழைகளை, பூதக்கண்ணாடி கொண்டு காட்டும் தளம் engrish.com. விளம்பரங்களில் ஜப்பான்காரர்கள் செய்யும் ஆங்கிலப் பிழைகள் அதிரடிச் சிரிப்பை வரவழைக்கின்றன. உதாரணம் baby sitter என்பது baby shitter என்றும், election என்பது erection என்றும் ஜொலிக்கிறது. அவர்களின் பிழைகளை தொடர்ந்து அப்டேட் வேறு செய்கிறார்கள் இந்த வலைத்தளத்தினர்.

*(தமிழ்நாட்டுல இதே மாதிரி தமிழில் பிழை கண்டுபிடிக்க ஆரம்பிச்சாங்கன்னா தாங்குமா?)*





தமிழ் சினிமா ஹீரோக்கள் "நான்தான் நம்பர் ஒன்" என புஜபலம் காட்டிச் சண்டை போடுவது மாதிரி, search engine-களும் சண்டை போட ஆரம்பித்துவிட்டன. google, askjeeves, yahoo எல்லாம் எனக்கு அப்புறம்தான் என சவுண்ட் விடுகிறது jax2.com. "மற்ற என்ஜின்கள் தேடித் தருபவை பெரும்பாலும் தேவையில்லாத ரிசல்ட்களே. நாங்கள் தேடித் தருவதோ துல்லியமான ரிசல்ட்" என 'மைக்' இன்றிக் கூவுகிறார்கள்.

*(உண்மையான்னு நீங்களே பார்த்துக் கோங்க!)*

சினிமா ட்ரைலர்கள், புதுப்பட ஸ்டில்கள், சினிமாக்காரர்களின் பேட்டிகள் (ஒலி வடிவில்), வால் பேப்பர்கள், எக்கச்சக்க சினிமா செய்திகள் எல்லாவற்றையும் 'கமகம'வெனத் தருகிறது cinesouth.com. சிம்ரனின் 780 புகைப்படங்கள் கொட்டிக் கிடக்கின்றன. எல்லாவற்றையும் அனுபவிக்க காசு உண்டு என்றாலும் நான்கு ஆண்டுகளாக கோலிவுட்டின் நம்பர் 1ஆக மினுமினுக்கிறது இந்தத் தளம். மலையாளம், தெலுங்கு, கன்னட சினிமாக்களின் செய்திகளும் கிடைப்பது ப்ளஸ்.

**ஜாலி எஸ்.எம்.எஸ்.**

சர்தார்ஜி தம் பெயரில் ஒரு சேமிப்புக் கணக்கு ஆரம்பிக்க வங்கிக்குச் சென்றார். விண்ணப்பப் படிவத்தை வாங்கிய அவர் டெல்லிக்குக் கிளம்பினார். ஏன்? ஏன்னா, ஃபார்மில் 'Fillup in capital' என இருந்தது!

- ப்ரௌசர்

## இப்படிச் செய்யலாமா?




அண்மையில் நண்பரொருவரின் திருமண விழாவிற்குச் சென்றிருந்தேன். மண்டப வாசலில் ஸ்பீக்கர் கட்டி சினிமாப் பாட்டுகளை ஒலிபரப்பிக் கொண்டிருந்தனர். அப்படி இடம்பெற்ற ஒரு பாடல், அந்த இனிய சூழலையே கெடுத்துவிட்டது. அப்பாடலில் வரும் 'நீ வெளங்காம போயிடுவ', 'நீ உருப்பட மாட்டே', 'உனக்கு எய்ட்ஸ் வரும்' என்கிற படு அமங்கலமான வார்த்தைகள் திருமணத்திற்கு வருவோரை முகம் சுளிக்க வைத்துவிட்டன. நல்லதொரு நிகழ்ச்சியில் இப்படிப்பட்ட மோசமான பாடல்களை ஒலிபரப்பலாமா? புனிதமான நிகழ்வுகளை நடத்துவோர் இதனை உணர்வரா?

- புதுவை ரேவதி

வாசகர் குமுறல்

## பிரமிட் தேசம் 3

# அதிசயமே அசந்துபோகும்

எகிப்து என்றாலே எல்லோருக்கும் முதலில் நினைவுக்கு வருவது, முக்கோண வடிவில் மிக கம்பீரமாய், காலத்தை வென்று நிலைத்து, உலக அதிசயங்களில் ஒன்றாகக் கருதப்படும் பிரமிடுகள்தாம். 'சகலமும் காலத்தைக் கண்டு பயப்படுகையில், காலமே பிரமிடுகளைக் கண்டு பயப்படுகிறது' - என்ற பழங்கால அனாமதேயப் பழமொழிக்கேற்ப, நான்காயிரம் ஆண்டுகளையும், இயற்கையின் சீற்றங்களையும் எதிர்கொண்டு, இன்றைக்கும் பிரமிடுகள் கட்டுக்கோப்புடன் காணப்படுவது, கண்டிப்பாய்ப் பார்க்க வேண்டிய அருங்காட்சி!

உலக அதிசயங்களைப் பற்றி எழுதுகையில், நாம் பரவலாய்த் தெரிந்ததாய்ச் சொல்லிக் கொள்ளும் ஒரு தவறான கருத்தை விளக்க விரும்புகிறேன். தாஜ் மகால், சீனப் பெருஞ்சுவர், பீஸா சாய்ந்த கோபுரம் - இவற்றை உலக அதிசயங்களாக நம்மில் பலர் எண்ணுவது தவறு. எகிப்தியப் பிரமிடுகள், பாபிலோன் தொங்கும் தோட்டம், ஜீயஸ் சிலை, ஹாலிகார்னாஸிஸ் கல்லறை, ரோடங் கொலோஸஸ் சிலை, அலெக்ஸாண்ட்ரியா கலங்கரை விளக்கு, எஃபிஸஸ்ல்ஸ் டயானா கோவில் - ஆகிய ஏழும்தான் ஆதிநாட்களில் ஏழு அதிசயங்களாகக் குறிப்பிடப்பட்டன. காலப்போக்கில் பிரமிடுகளைத் தவிர மற்ற அனைத்தும் அழிந்துவிட்டதில், பின்னர் கட்டப்பட்ட சீனப்பெருஞ்சுவர், தாஜ்மகால், இத்தியாதிகள் உலக அதிசயங்களாகப் பேச்சு வழக்கில் சொல்லப்படுகின்றன.



**சிவசங்கரி**

கெய்ரோவின் எல்லையில் துவங்கி ஃபாயூம் (Fayaum) வரையிலான எழுபது கி.மீ. பாலைவன விஸ்தீரணத்தில், இதுவரை தொண்ணூற்றி ஏழு பிரமிடுகள் முழுமையாகவும் சிதிலமடைந்தும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவற்றில் கிஸா பிரமிடுகள் முக்கியம் வாய்ந்தவையாகக் கருதப்படுவதில், இவற்றைப் பார்க்க டூரிஸ்ட் கூட்டம் அலைமோதுகிறது. கிஸா பிரமிடுகள் குறித்துப் பல கணிப்புக்கள் ஆய்வாளர்களால் கூறப்படுகின்றன. ராபர்ட் பவல் என்ற ஆய்வாளர் தமது 'ஓரியன் மர்மம்' என்ற புத்தகத்தில், 'கிஸாவின் மூன்று பிரமிடுகளும் 'ஓரியன்' நட்சத்திர மண்டலத்தில் உள்ள மூன்று நட்சத்திரங்களின் நேர்க்கோட்டில் கட்டப்பட்டுள்ளன' என்கிறார். கிரஹாம் ஹேங்காக் என்ற ஆய்வாளரோ தமது 'இறைவனின் கைரேகை' என்ற புத்தகத்தில், பிரமிடுகளின் காலம் கி.மு. 12,000 வருஷங்களுக்கும் முந்தையது என்று வாதிடுகிறார். இப்படிப் பல ஆய்வுகள்! எது எப்படியானாலும், பிரமிடுகள் பற்றின மர்மங்களை முழுமையாக எவராலும் கணிக்க இயலவில்லை என்பதுதான் உண்மை!

ஆதிநாளைய எகிப்திய மொழியில் பிரமிட் என்றால், Per-em-us 'நேர் உயரம்' என்று அர்த்தமாம்! கி.மு. 450-ம் ஆண்டு எகிப்துக்குப் பயணம் செய்து நாட்குறிப்பு எழுதிய கிரேக்க அறிஞர் ஹீரோடோடஸ் (Herodotus) அப்போதே 'கட்டிய காலத்தைக் கணிக்க இயலாத, பழமையானவை' என்று பிரமிடுகளைக் குறித்துத் தம் குறிப்பேட்டில் எழுதியிருக்கிறார்! பிரமிடுகளைக் கட்டுவது கி.மு. 2,700-ல் துவங்கியது என்கிறார்கள். அந்தக் காலத்து எகிப்தியர்களுக்கு,



• பிரமிட் பின்னணியில் பிரியா, அரேபிய நண்பர் ஆகியோருடன்...

சின்ன அளவு பிரமிடுகளும், ஸ்ஃபிங்ஸ் என்று அறியப்பட்ட மனித முக சிங்கச் சிலையும் இருக்கின்றன. இந்தப் பிரமிடு களைக் கட்டத் தேவையான பாறாங்கற்களை இருபது கி.மீ.க்கு அப்பால் நைல் நதியின் அக் கரையிலுள்ள டுரா (Tura) மலையிலிருந்தும், தெற்கில் சுமார் ஆயிரம் கி.மீ. தொலைவிலுள்ள அஸ்வான் நகரிலிருந்தும்



• கீஸாவில் ஒட்டக சவாரி

# அதிசயம்!

முக்கியமாய் 'ஃபெரோக்கள்' - ராஜாக்களுக்கு - இறந்த பின் ஒரு வாழ்க்கை இருப்பதிலும், ஆவி மீண்டும் மரித்துப் போன சடலத்தில் புகுந்து, புது வாழ்க்கை யைத் தொடங்குவதிலும் அழுத்தமான நம்பிக்கை இருந்ததில், சடலங்களைப் பாதுகாத்து வைப்பதில் அவர்கள் அதிகமான கவனத்தைச் செலுத்தியிருக் கிறார்கள். இதன் விளைவாகத்தான், ஃபெரோக்களின் சடலங்களைப் பாது காத்து வைக்கப் பிரமிடுகள் உருவாக்கப் பட்டன.

இந்த வகையில் முதன்முதலில் கட்டப் பட்ட 'படிக்கட்டுப் பிரமிட்'டை, சக்காரா என்ற இடத்தில் இன்றைக்கும் பார்க்க முடிகிறது. கீஸாவிலுள்ள மூன்று பிரமிடு களில் 'கிரேட் பிரமிட்' என்பது எல்லா வற்றையும்விட அளவில் பெரியது. ஃபெரோ கியாப்ஸ் (Cheops), அவர் மகன் ஃபெரோ கெப்ரான் (Chephron), அவ ருடைய பிள்ளை மைசிரீனஸ் (Mycerinus) ஆகியோரின் சடலங்களைப் பாதுகாத்து வைக்கக் கட்டப்பட்ட பிரமிடுகள்தாம், 'கிரேட் பிரமிட்ஸ் ஆஃப் கீஸா' என்று சரித்திரத்தில் இடம் பெற்றுள்ளன. இங்கு இம்மூவரோடு, அவரவர் ராணிகளுக்கான

கொண்டு வந்தார்களாம். கற்கள் என்றால், என்னமோ நாம் இங்கு உபயோகிப்பது போன்ற செங்கல், அல்லது அதைவிடக் கொஞ்சம் பெரிய அளவு என்று எண்ண வேண்டாம். மூன்று பிரமிடுகளில் மட்டும் தோராயமாய் 2.5 கோடி டன் பாறாங் கற்களை உபயோகப்படுத்தியுள்ளார்கள் என்றால், அவற்றின் பிரும்மாண்டத்தை உங்களால் உணிக்க முடியும். ஃபெரோ கியாப்ஸின் பிரமிட்டில் மட்டும் அறுபது லட்சம் டன் - சராசரியாய் 2.5 டன் - எடை கொண்ட 2,30,000 கற்கள் பயன்படுத்தப்பட்டிருப்பதையும், அவற்றில் சிலவற்றின் எடை பதினைந்து டன்னுக்கும் மேலேயே என்கிற விவரத் தையும் அறிந்து கொள்ளும்போது, இதை எப்படி வெட்டினார்கள், எங்ஙனம் கொண்டு வந்தார்கள், எவ்வாறு அத்தனை உயரத்திற்குத் தூக்கிச் சென்றார்கள் என்று கன்னாபின்னாவென்று கேள்விகள் எழுவதில்... திகைப்பில் நம் தலை கிறுகிறுத்துத்தான் போகிறது!

மின்சார ரம்பங்களோ, வெடிமருந்தோ

கண்டுபிடிக்கப்படாத அந்நாட்களில், பாறைகளை எப்படி வெட்டினார்கள், எவ்வாறு எடுத்து வந்தார்கள் என்பதற்கு, பாப் கொடுத்த விளக்கங்கள் ரொம்ப சுவாரஸ்யமானவை. எந்த மலையிலிருந்து கற்களை வெட்ட வேண்டுமோ, அதில் ஆங்காங்கு முதலில் ஆழமாகத் துளைகளைப் போடுவார்களாம். பின்னர் அவற்றில் ஸிக்கமோர், ஸிடார் மரக்குச்சிகளைத் திணிந்து நீர் ஊற்றிக் கொண்டே இருந்தால், தண்ணீரைக் குடிக்கும் மரக்குச்சிகள் உப்புவதன் காரணமாய், பாறை வெடித்து விடுமாம்! இதைத்தவிர துளைகளில் வெந்நீரைத் தொடர்ந்து ஊற்றிவிட்டு, திடுமெனக் குளிர்ந்த நீரை விட்டாலும் - சீதோஷ்ண மாற்றத்தில் பாறையில் வெடிப்பு உண்டாகுமாம். எத்தனை நாளைக்குத் தண்ணீரை ஊற்றி, அது எப்போது வெடிப்பது, அதை எப்படி வெட்டிச் சீராக்குவது! இதெல்லாம் நடக்கிற காரியமா - என்கிற மலைப்பு எழுந்தாலும், சீராக வெட்டப்பட்டு ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்கப்பட்ட மைசூர்பாகுத் துண்டங்கள் போல நேர்த்தியாக இருக்கும் பிரமிட், இதர கோவில்களைப் பார்க்கும்போது ஆதிநாளைய எகிப்தியர்களின் திறமைக்கு ஒரு சல்யூட் வைக்கவே தோன்றுகிறது! வெட்டிய கற்களை (ஞாபகம் இருக்கட்டும் - ஒவ்வொன்றும் பல டன் எடை யுள்ளவை!) பபைரஸ் தண்டுகளை ஒன்றாக இணைத்துக் கட்டிய தெப்பங்களில் ஏற்றி, பல நூறு கிலோமீட்டர் தூரம் நைல் நதியில் எடுத்து வந்ததும் மகத்தான சாதனையன்றி வேறு என்ன? ஹீரோடோடஸ் தம் குறிப்பேட்டில் லட்சம் தொழிலாளிகளாவது கட்டட நிர்மாணத் தொழிலில் ஈடுபட்டிருந்ததாகக் குறிப்பிடுகிறார். அறுவடை முடிந்து, நைலில் வெள்ளம் வரும் காலத்தில் பாறைகளைத் தெப்பத்தில் கொண்டு வந்து, வேலையின்றி இருக்கும் விவசாயிகள் மூலம் பிரமிடுகள் கட்டப்பட்டன என்பது அவரது கணிப்பு. அதுசரி, மலையை உடைத்து, கற்களை வெட்டி, நதியில் எடுத்துவந்து, பாலிஷ் செய்த பிறகு, அவற்றைக் கட்டடங்களின் உச்சிக்கு எப்படி எடுத்துச் சென்றார்களாம்? பாலிஷ் செய்யப்பட்ட ராட்சதக் கற்களை மேலே எடுத்துப்போக கிரேன், ராட்டின வசதி இல்லாத அந்நாட்களில், கட்டடத்தைச் சுற்றி சரிவாய் (யானைப் பாதை போல) மண்மேடுகளை (ramps) உருவாக்கி அதில் பாறைகளை நெம்பியும், உருட்டியும் கொண்டு சென்று, பிறகு பூச்சு வேலையை முதலில் மேலே துவங்கி, கீழே கொண்டு வந்ததும், மண் மேடுகளை அகற்றியிருக்கலாம் என்பது ஆய்வாளர்களின் ஊகம், விளக்கம் எதுவாக இருப்பினும், அபாரமான சாதனைதானே!

மூன்று பிரமிடுகளின் உள்ளே சென்று பார்க்க டிக்கெட் வசதி உண்டு என்றாலும்கூட, ஆயிரம் வருஷங்களாய்க் கொள்ளைக்காரர்களின் கைவரிசைக்கு உள்ளானதில், அரிய பொக்கிஷங்கள், சடலங்கள் என்று ஏதுமின்றி, மூன்றும்

'நியூ'வில் ஓர் ஆச்சரியமான விஷயம் என்ன தெரியுமா? பாடல் வரிகளில் அத்தனை ஆபாசங்கள் என்று சென்சார் ஒதுக்கித் தள்ளிய 'மார்க்கண்டேயா' பாடலைப் பாடியது நித்திரையிலும் சுகமாய் கேட்கத் தூண்டும் அதி அற்புதமான கர்நாடக சங்கீதப் பாடல்களை பாடிய நித்யஸ்ரீ! நம்மைப் பார்த்தவுடன் மிகுந்த சங்கடத்துடன் பதிலளித்தார். ''இந்தப் பாடல் மட்டும் இத்தனை சர்ச்சையை உருவாக்கும் என்று கனவிலும் நினைக்கவில்லை. என்னைத் திரையுலகில் அறிமுகப்படுத்திய ரஹ்மானின் அழைப்பைத் தட்ட முடியாததால் பாடினேன். இதற்கு மேல் வேண்டாமே...'' என்றபோது, அருகில் ஓர் இனிய நாதம் கேட்டது. ''நேத்துதான் பெண் குழந்தை பிறந்துச்சு''- பெருமை பொங்கினார் நித்யஸ்ரீ. அடடா! இப்படியா நேரம் காலம் தெரியாமல் நாம் கேள்வி கேட்பது?

- செந்தில்

# இவரா பாடினார்?



ஒரே மாதிரியான வெற்று உள்ளமைப் போடு இருக்கின்றன. ஏதாவது ஒன்றைப் பார்த்தால் போதுமானது. 1993ல் தீவிர வாதிகள் அதனுள் குண்டு வெடிக்கச் செய்ததில், பல பயணிகள் காயமுற்ற தால், இப்போதெல்லாம் சகட்டுமேனிக் குப் பயணிகளை பிரமிடுகளினுள் அனுமதிப்பதில்லை. காலையில் நூற்றி யைம்பது, மாலையில் நூற்றியைம்பது பேர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவதில், கூட்டம் அதிகமுள்ள நாட்களில் முன்கூட்டியே நுழைவுச்சீட்டுகளைக் காசு கொடுத்து வாங்கி வைத்துக் கொள்வது ஏமாற்றத்தைத் தவிர்க்கும்.

நாங்கள் தனயன் கெப்ரானின் பிர மிட்டைத் தேர்ந்தெடுத்து உள்ளே சென்றோம். முதுகுத்தண்டில் பிரச்னை உள்ளவர்களும், ஆஸ்துமா, இருதய நோயாளிகளும் செல்ல வேண்டாம் என்று பாப் கூறிய அறிவுரையைக் கேட்டு நீலு, காதர் வெளியே நின்றுவிட, எதற்கும் துணிந்த கட்டைகளாகப் பிரியாவும் நானும் உள்ளே சென்றோம். ஏற்கெனவே நான் அனுபவித்ததுதான் என்றாலும், புதுசாய்ச் செல்கிற மாதிரியான 'த்ரில்'லை இந்த முறையும் பிரமிட் உள்பயணம் எனக்குத் தந்தது.

நுழைவாயிலைக் கடந்தால் அப்புறம் நிமிர்ந்து நிற்க முடியாது. நாலடி உயரம், மூன்றடி அகலத்தில் சறுக்குமரம் போலக் கீழ்நோக்கி, சுமார் நூற்றியைம்பது அடி கள் இரண்டாக மடிந்தவாறு நடந்தால், சடலத்தைப் புதைத்த பெரிய அறை வருகிறது. வெறிச்சோடியிருக்கும் அறை யைப் பார்த்துவிட்டு, மீண்டும் இரண்டாக மடிந்து சறுக்குமரப் பாதையில் மேல் நோக்கி வரவேண்டும். சில சமயம் கடினமான காரியங்களைச் செய்யும் போது கொச்சைத் தமிழில் 'பெண்டு கழண்டுபோச்சு!' என்று கூறக் கேட் டிருப்போம். இங்கு உல்டா! பிரமிடுக்குள் சென்றுவந்தால் 'பெண்டு உண்டாகி விடும்' - வளைந்த முதுகை மீண்டும் நிமிர்த்த அவகாசம் தேவைப்படும்!

(தொடரும்)

**த**ன் மகன் சஞ்சய்யை இதுவரை வெளியுலகுக்குக் காட்டாமல் இருந்தாலும், பத்திரிகையாளர்கள் விரும்பினால், தன் வீட்டிற்கு அழைத்துச் சென்று காட்டுகிறார் விஜய்.

**கு**றுக்கு வழியில் பப்ளிசிட்டி தேடுவதுதான் தமிழ் சினிமாவின் தற்போதைய ஃபேஷன். விளைவு, 'போஸ்' கமர்ஷியலாக போணியாக, வெகு விரைவில் ஸ்ரீகாந்த் - சிநேகா காதல் விவகாரம் தூசு தட்டப்படுமாம்.

**ம**ணிரத்னம், ஷங்கர் முதற்கொண்டு தமிழ் சினிமாவின் அத்தனை பிரபல இயக்குனர்களும் 'மெட்டி ஒலி' போஸிடம் நேரிலும், செல்ஃபோனிலும் பேசி, 'அடுத்த படம் கண்டிப்பாக பண்ணுவோம்' என்றிருக்கிறார்களாம். அடேங்கப்பா!

**ச**மீபத்தில் நடந்த களேபரங்களைத் தொடர்ந்து, எஸ்.ஜே. சூர்யாவின் அடுத்த படமான 'பிளஃப்' நிச்சயம் சென்னை சென்சாருக்கு அனுப்பப்படாமல், ஹைதராபாத்தில் தான் சென்சார் செய்யப்படுமாம்.


• விஜய்


• காயத்ரி ரகுராம்

**''உ**ங்களை இதுவரை யாரும் சரியாகப் பயன்படுத்தியதில்லை'' என்று தனுஷுக்கு ஜோடியாக 'ஒரு நாள் ஒரு கனவு' படத்துக்கு புக் செய்த பொழுது செல்வராகவன் புகழ்ந்துவிட்டதால் வேறெந்தப் படங்களையும் ஒப்புக் கொள்ளாமல் இருக்கிறார் காயத்ரி ரகுராம். அதோடு செமத்தியான டயட்டில் அழகுச் சிலையாகவும் மாறிவிட்டார், தெரியுமா?

**'எ**னக்கு ஆங்கிலம் நன்றாக தெரியும். அதனால்தான் ஆங்கிலப் படங்களில் நடிக்கிறேன்' என்று மாதவன் பேட்டி அளித்ததற்கு சக நடிகர்கள் மத்தியில் கடும் எதிர்ப்பு. 'அப்போ, நாங்க என்ன கார்ப்பரேஷன் ஸ்கூலில் தமிழ் மீடியம் படித்தவர்களா?' எனக் கேள்வி எழுப்புகின்றனர்.

**த**னக்கு தேசிய விருது கிடைத்ததை தமிழ்ப் பத்திரிகைகள் கண்டு கொள்ளவில்லை என்று வருத்தப்படுகிறார் மீரா ஜாஸ்மின்.

**'ஆ**ட்டோ கிராஃப்', 'பார்த்திபன் கனவு', 'காக்க காக்க' போன்ற தமிழ்ப் படங்களை ஆசை ஆசையாய் பெரிய விலைக்கு வாங்கி, ரீமேக் செய்து பார்த்தது தெலுங்கு திரையுலகம். ஆனால் அத்தனை படங்களும் அட்டர் ஃப்ளாப்!

**'தே**வதையைக் கண்டேன்' ரிலீஸ் ஆகும் வரைக்கும் எந்த படத்தையும் ஒப்புக் கொள்ளாமல் பொறுமை காத்து, வீட்டில் பொழுதைப் போக்குகிறார் ஸ்ரீதேவி விஜயகுமார்.

# இருக்கு வழி விளம்பரம்!

• ஸ்ரீகாந்த் - சிநேகா

சமீபத்திய சர்ச்சைகளுக்குப் பிறகு சென்னை சென்சார் ஓர் அதிரடி முடிவெடுத்திருக்கிறது. முன்புபோல் ஒரு காட்சிக்கு 'கட்' கொடுக்கும் பொழுது இயக்குனர், தயாரிப்பாளர்களிடம் இனியும் விவாதிக்கப் போவதில்லையாம். (கோபத்தில் அவர்களும் தங்கள் வசமுள்ள செல்ஃபோனை தூக்கி எறிந்தால்!) நேரடியாக கட்ஸ் கொடுத்து, வேண்டுமானால் மும்பைக்குச்



• வெங்கட்

சென்று போராடிக் கொள்ளுங்கள் என்று கட் அண்ட் ரைட்டாகச் சொல்லப் போகிறதாம்... அச்சச்சோ!

- கண்

# புக்ஷெல்ஃப்




## இந்திய இலக்கியச் சிற்பிகள் விந்தன் - மு.பரமசிவம்

**அ**மரர் கல்கி பெயரிட்டு, அறிமுகப்படுத்திய அற்புதப் படைப்பாளி. ஏழைகளை, பாட்டாளிகளை உயர்த்தவே எழுத்தை அர்ப்பணித்த இலக்கியவாதி. பத்திரிகை உலகிலிருந்து திரையுலகுக்கு உயர்ந்த உழைப்பாளி. வியாபாரமாகிப் போன எழுத்துலகில் வேறு விதமாக அதைப் பிரயோகிக்காத லட்சியவாதி, விந்தனின் வாழ்வையும், படைப்புகளையும் கூறும் நூல்.

*(சாகித்திய அகாடமி, புதுடில்லி-1) சி.ஐ.டி.. வளாகம், டி.டி.டி.ஐ அஞ்சல், தரமணி, சென்னை - 600 113. விலை ரூ.25*




## எதையும் சாதிக்க முடியும் - கவிதாசன்

**பா**ர்க்கத் தெரிந்தால்தான் பாதை தெரியும். பாதை புரிந்து பயணம் போனால்தான் வெற்றி கிட்டும். துவண்டுவிட்ட மனங்கள் துள்ளியெழுந்து வேகம் கொள்ள, பயம் வெளியேறி, சுயம் தலைதூக்க, இளைய தலைமுறைக்கு பார்க்கவும், பாதை சேர்க்கவும் உதவும் சுயமுன்னேற்ற உளவியல் நூல்.

*குமரன் பதிப்பகம், 3, முத்துகிருஷ்ணன் தெரு, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.30*



## எல்லைகள் - சாந்தா தத்

'**த**னி மனிதனோ, சமூகமோ, அவரவர் எல்லைகளைப் புரிந்து கொண்டால்தான் பிரச்னைகளுக்குத் தீர்வு பிறக்கும். விட்டுக் கொடுத்தலே, அது தாமாகவோ, பலவந்தமாகவோ, வாழ்வின் நிதர்சனம்' என்று மனித உணர்வுகளின் எல்லைகளை வரையறுத்துக் கூறும் சிறுகதைகளின் தொகுப்பு.

*அருள் புத்தக நிலையம், 12, வாணியர் வீதி, குறிஞ்சிப்பாடி - 607 302. விலை ரூ.60*



## தமிழில் நகைச்சுவை - எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

'**கா**ணவில்லை. கண்டுபிடிப்பவர்களுக்குத் தக்க சன்மானம்' என்று அறிவிப்புத் தருமளவுக்கு எழுத்துலகில் காணாமற்போய்விட்டது நகைச்சுவை. இங்குக்கு பதிலாக நகைச்சுவையை பேனாவில் ஊற்றி எழுதிய அமரர் கல்கி முதல், சமீபத்திய 'சோ' வரை, இதுவரை எழுதியவற்றை வாசித்து ஆறுதல் கொள்ள தொகுக்கப்பட்ட பதிப்பு.

*நர்மதா பதிப்பகம், 10, நானா தெரு, தி.நகர், சென்னை - 600 017. விலை ரூ.35.*

**- விஷ்வக்**



ஓம் ஸ்ரீ குருப்யோ நம : ஹரி : ஓம் ஸ்ரீ மஹாகணபதயே நம :
ஓம் ஸ்ரீ மாத்ரே நம :



# ஸ்ரீ மாத்ரு பூமி டூர்ஸ்

Old No. M-763, New No.11 -8th Main Road, Thiruvalluvar Nagar, Thiruvanmiyur, Chennai - 600 041. Cell : 94440 21221, Phone : 24405506,
E-mail : srimaatour@sify.com RAMAKRISHNAN - Coimbatore Phone : 5586145

சென்னையிலிருந்து புறப்படும் கீழ்கண்ட எமது ஒருநாள் யாத்ரைகள் அதிகாலை 6.00 மணியளவில் வீட்டருகில் இருந்து அழைத்து சென்று இரவு 9.00 மணியளவில் திரும்ப விடுகிறோம். 50% தொகை D.D. (அ) Cheque அனுப்பி விரைவில் முன் பதிவு செய்யவும். உணவு செலவு தனி.

**11-10-2004** சோம பிரதோஷம் சுருட்டபள்ளி, திருப்பாசூர், வைத்தீஸ்வரன் கோவில், திருநாகேஸ்வரம், திரிசூலநாதர் (பிரதோஷ தரிஸனம்) ரூ.265/- மட்டும்.

**நவராத்திரி ஸ்பெஷல்** — **ஒருநாள் யாத்ரைகள்**

**15-10-2004** வெள்ளி ஸ்ரீ காளிகாம்பாள், திருவுடை, வடிவுடை, கொடியிடை, ஸ்ரீ வைஷ்ணவி ரூ.280/- மட்டும்.

**17-10-2004** ஞாயிறு கற்பகாம்பாள், திரிபுரசுந்தரி, ஸ்ரீ காமாக்ஷி, நெமிலி ஸ்ரீ பாலா, படப்பை ஜெயதுர்கா, ரூ.300/- மட்டும்.

**24-10-2004** ஞாயிறு (யாத்ரை எண்.1) திருவக்கரை, மயிலம், திருவண்ணாமலை (கிரிவலம் பை வேன்) ரூ.300/- மட்டும்.

**24-10-2004** ஞாயிறு (யாத்ரை எண்.2) திருமலைவையாவூர், உத்திரமேரூர், தென்னாங்கூர், காஞ்சிபுரம் ஸ்ரீ வரதர் ரூ.300/- மட்டும்.

**கீழ்கண்ட எமது யாத்ரைகள் 2-ம் வகுப்பு இரயில் கட்டணம், தங்கும் அறைகள் மற்றும் சைவ உணவு உட்பட.**

யாத்ரைகளில் கலந்துகொள்பவர்கள் 50% தொகை D.D. (அ) Cheque அனுப்பி விரைவில் முன் பதிவு செய்யவும். 60 வயதுக்கு மேற்பட்ட ஆண் பெண்களுக்கு இரயில் கட்டண சலுகை உண்டு. எமது வாகனங்களில் இரவு பயணம் கிடையாது.

**14-10-2004** வியாழன் முதல் 10 நாட்கள் மஹாராஷ்டிரா ஸ்பெஷல் ஷீரடி, சனிசிங்கனாபூர், அஷ்ட விநாயகர், பண்டர்பூர், கோலாப்பூர் மற்றும் ஐந்து ஜோதிர்லிங்கம் உட்பட ரூ.5050/- மட்டும்.

**24-10-2004** ஞாயிறுமுதல் 8 நாட்கள் நவதிருப்பதி, நவகயிலாயம், அகஸ்தியர் அருவி ஸ்நானம், கன்னியாகுமரி, சுசீந்தரம், திருச்செந்தூர், திருநெல்வேலி, ராமேஸ்வரம், பிள்ளையார்பட்டி, மதுரை ரூ. 3560/- மட்டும்.

**1-11-2004** திங்கட்கிழமை 10 நாட்கள் கர்நாடகா தலக்காவேரி துலா ஸ்நான ஸ்பெஷல் பெங்களூர், மைசூர், மதூர், சிருங்கேரி, மூகாம்பிகை, கடில், உடுப்பி, தர்மஸ்தலா, சுப்ரமண்யா, கலசா ஹொரநாடு, தங்க அன்னபூரணி தரிசனம் ரூ.4800/- மட்டும்.

**13-11-2004** சனிக்கிழமை முதல் 12 நாட்கள் குஜராத் ஸ்பெஷல் அகமதாபாத், ஸ்வாமி நாராயணன், அட்சரதாம், சோம்நாத், போர்பந்தர், நாகேசம், பஞ்ச துவாரகா (பேட், கோமதி, மூல, காங்ரோலி, டாகூர்நாத், ஸ்ரீ நாத்வாரகா) மாத்ருகயா, சூரியனார்கோவில், புஷ்கர், ஹரசித்தி, மவுண்டபு, அம்பாஜி, ஏக்லிங்க்ஜி ரூ.6350/-

**3-12-2004** வெள்ளி முதல் 10 நாட்கள் ஆந்திரா ஸ்பெஷல் விஜயவாடா, த்ராக்ஷாராமா, சமால் கோட், அமராவதி, ராயலி த்வாரகாதிருமலா, ஸ்ரீகூர்மம், விசாகப்பட்டினம், அன்னாவரம், சிம்மாசலம், பத்ராசலம் ரூ.5250/- மட்டும்.

**19-12-2004** ஞாயிறு முதல் 6 நாட்கள் ஆந்திரா ஸ்பெஷல் அஹோபிலம், ஸ்ரீ சைலம், மஹா நந்தி, மந்த்ராலயம் ரூ.2950/- மட்டும்.





# கிரவுண்ட் ஜீரோ!

மறுபடி அந்த ஃபீனிக்ஸ் பறவை புதிய சிறகுகளோடு தயாராகிவிட்டது. 2001, செப்-11ல் நியூயார்க் நகரைச் சூழ்ந்த புகை மூட்டத்தையும், நின்றுபோன உயிரோட்டத்தையும் மறப்பதென்ன சுலபமா? இரட்டைக் கோபுரங்கள் இருந்த இடத்தின் தற்போதைய பெயர் 'கிரவுண்ட் ஜீரோ!'. அதில் வடுக்களின் மேல் 'கிடுகிடு'வென உயரத் தயாராகி விட்டன கட்டடங்களின் மாதிரிகள்.

அதில் ஒன்றுதான் சுதந்திரக் கோபுரம் கட்டும் திட்டம். இது 1776 அடி உயரத்திற்கு எழுப்பப்பட இருக்கிறது. அதன் உச்சியில் அமையவிருக்கும் ஊசிக் கோபுரம் (காண்க: படம்) மட்டும் 276 அடி இருக்குமாம். நாற்பது கட்டடக் கலை வல்லுநர்கள் இதன் மாடலை வடிவமைக்கும் பணியில் உள்ளனராம். இதுவே உலகின் மிக உயர்ந்த கட்டடமாக அமையுமாம்.

அதேபோல், அங்கு அமையவிருக்கும் நினைவிடத்தை வடிவமைக்க, ஒரு போட்டி நடந்துள்ளது. 63 நாடுகள், 49 மாநிலங்களில் இருந்து வந்த 5200 மாடல்களில், தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது மைக்கேல் அரேட் மற்றும் பீட்டர் வாக்கர் ஆகியோர் இணைந்து செய்த டிசைன்தான்.

இந்த ப்ராஜெக்டிற்கு 'மறு பிறப்பிற்கான திட்டம்' என பெயரிடப்பட்டுள்ளது. கிரவுண்ட் ஜீரோவின் ஒவ்வொரு நிகழ்வையும் படம் பிடித்துக் காட்டுகிறது www.projectrebirth.org. 2002, மார்ச் 2ல் இரட்டைக் கோபுரங்கள் இருந்த இடத்தில் இரு ஒளிக் கீற்றுகள் அமைக்கப்பட்டதிலிருந்து, தற்போதைய நொடி வரை, அங்கு நடப்பனவற்றைச் சொல்கிறது இத்தளம். ஆறு கேமராக்கள் அவ்விடத்தை கண் கொட்டாமல் பதிவு செய்கின்றன. ஜூலை 4ல் அடிக்கல் நாட்டப்பட்டுவிட்டது. குறிப்பிட்ட காலத்திற்குள் முடிக்க வேண்டும் என்ற திட்டமேதும் இல்லையாம்.

பணிகள் முடிந்த பின், அந்த வான்வெளியில் பறக்க விமானங்களுக்குத் தடை வந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை!

- ஷிவ்

# சாமி

வாசுகி சோமு



மனைவியின் வற்புறுத்தலால் கோயிலுக்கு வந்திருந்தான் மாதவன். அவனுக்குக் கடவுள் மீதெல்லாம் பெரிதாய்ப் பற்றில்லை. மனிதர்களை மட்டுமே நம்புகிறவன்.

கோயிலில் நடுத்தர வயதுப் பெண்ணொருத்தி, கர்ப்பக்கிரகத்தைப் பார்த்து ஓங்கிக் குரல் கொடுத்து அழுது கொண்டிருந்தாள்.

''சாமி! நீ கண்ணைத் திறக்கமாட்டியா? உடம்பு முடியாத என் பிள்ளைக்கு வைத்தியம் பார்க்கப் பணமில்லையே... கண்ணைத் திறந்து எனக்கு ஒரு வழிகாட்ட மாட்டியா?''

மாதவனுக்கு ஒரு யோசனை 'பளிச்'சிட்டது. மனைவி காணிக்கை செலுத்த வைத்திருந்த பணத்தைப் பிடுங்கி, அந்தப் பெண்ணிடம் கொடுத்தான்.

'கடவுளால் எதுவும் நடக்காது. மனிதன்தான் உதவ முடியும் என்பதை அந்தப் பெண் புரிந்து கொள்ளட்டும்' என்று எண்ணினான்.

பணத்தை வாங்கிக்கொண்ட அந்தப் பெண், கர்ப்பக்கிரகத்தை நோக்கி நெடுஞ்சாண்கிடையாக விழுந்தாள். பிறகு ஓங்கிக் குரல் கொடுத்தாள்.

'கண்ணைத் தொறந்துட்டியே சாமி!'

# இரயில் பிரயாணங்களில்...

புத்தகங்களைச் சம்பாதிப்பதற்குச் சாதாரணமாக மூன்று வழிகள் உண்டு என்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. யாசகம் வாங்குதல், கடன் வாங்குதல், திருடுதல் ஆகியவை அந்த மூன்று வழிகளாகும். விலைக்கு வாங்குதல் என்னும் நாலாவது வழி ஒன்றும் இருக்கிறது. இவற்றில் நாலாவது வழியைக் கடைப்பிடிக்கும்படியான அவசியம் ரயில் பிரயாணத்தின்போது நம்மில் பலருக்கு ஏற்பட்டு விடுகிறது!

ரயில் பிரயாணத்தில் பலருக்குத் தூக்கம் சரியாக வருவதில்லை. ரயில் ஆடி அசைந்து குலுக்கிப் போடுகிற போட்டில், வருகிற தூக்கமும் விரைந்து ஓடிப் போகிறது. ஆகையால் பொழுது போக்குகிறதற்கு ஏதேனும் புத்தகம் இருந்தால் நல்லது என்ற எண்ணம் உண்டாகிறது. இவ்வாறு புத்தகப் படிப்பின் வளர்ச்சிக்கு ரயில்வேக்கள் மிக்க உதவி செய்கின்றன. இதற்காகவே பெரிய ரயில்வே நிலையங்களில் புத்தகக் கடைகளும் வைத்திருக்கிறார்கள். புத்தகம் சம்பாதிக்கும் முறைகளில் முதல் மூன்று முறைகளும் ரயில் பிரயாணத்தின் போது அவ்வளவாகச் சௌகரியப்படுவதில்லை. நாலாவது முறையைத்தான் கடைப் பிடிக்க வேண்டியிருக்கிறது.



ஒரு சமயம் ரயில் பிரயாணம் செய்ய நேரிட்டபோது எனக்கும் அத்தகைய அவசியம் ஏற்பட்டது. "தூக்கந்தான் வருவதில்லை; ஏதேனும் ஒரு புத்தகமாவது படித்து வைக்கலாம்!" என்று எண்ணி, திருச்சி ரயில் சந்திப்பில் உள்ள புத்தகக் கடையில் ஒரு புத்தகம் வாங்கச் சென்றேன். கடையில் இருந்த புத்தகங்களைக் கண்ணோட்டம் இட்ட பிறகு, பளபளவென்று மூவர்ண அட்டை போட்டதாக ஒரு புத்தகத்தைக் கண்டு பிடித்து வாங்கினேன். அது வோட்ஹவுஸ் என்னும் பிரபல ஆங்கில நாவலாசிரியர் எழுதிய புத்தகம். ஆசிரியர் வோட்ஹவுஸ் நகைச்சுவைக்குப் பெயர் போனவர். ஆங்கில மக்களின் நடை உடை பாவனைகளையும் பேச்சுக்களையும் வைத்துக் கொண்டு குலுங்கக் குலுங்கச் சிரிக்கும்படியான புத்தகங்களை எழுதிவிடுவார். சிற்சில பாத்திரங்களை வைத்துக் கொண்டே அடுத்தடுத்துக் கதைகள் எழுதுவார். "சிரிப்பு வந்தால் வரட்டும்; அல்லது ஒருவேளை தூக்கம் வந்தாலும் வரட்டும்" என்று எண்ணிக் கொண்டு, ஐந்தே முக்கால் ரூபாய் துணிந்து எடுத்துக் கொடுத்து, முந்நூறு பக்கமுள்ள ஒரு புத்தகத்தை வாங்கிக் கொண்டு போய் ரயிலில் என் இடத்தில் அமர்ந்தேன். அந்தப் புத்தகம் அதுவரையில் இருபத்தேழு லட்சத்து முப்பதினாயிரம் பிரதிகள் விற்றிருப்பதாக மேல் அட்டையிலேயே தெரிவித்திருந்தார்கள். விலைக்கு வாங்கிப் படித்தவர்கள் அத்தனை பேர் எனில், மற்ற மூன்று வழிகளில் படித்தவர்கள் எத்தனை பேர் இருக்க வேண்டும்? ஆங்கிலத்தில் புத்தகம் எழுதும் ஆசிரியர்கள் கொடுத்து வைத்தவர்கள்தான்! அவர்களுடைய அதிர்ஷ்டத்தை வியந்து கொண்டே புத்தகத்தைப் பிரித்துப் படிக்கலானேன்.

படிக்க ஆரம்பித்ததுமே ஓர் ஐயம்

தோன்றியது. ஒரு பாரா படித்ததும் சந்தேகம் அதிகமாயிற்று. ஒரு பக்கத்தை முடித்து இரண்டாம் பக்கத்தைத் தொடங்கியதும் சந்தேகம் ஊர்ஜிதமாயிற்று. "அட சட்! இந்தக் கதையை முன்னொரு தடவை படித்துத் தொலைத்திருக்கிறோமே? இதையா மறுபடியும் விலை கொடுத்து வாங்கினோம்? ஐந்தே முக்கால் ரூபாய் தண்டம்!" என்று சொல்லிக்கொண்டு புத்தகத்தைக் கீழே போட்டேன். பாவம்! புத்தகம் என்ன செய்யும்? புத்தகத்தைப் படித்து நான் சிரிப்பதற்குப் பதிலாக, அது என்னைப் பார்த்துச் சிரித்தது. சிரித்தது மட்டுமன்று; என்னுடன் அது பேசவும் செய்தது. "அப்பனே! என்னை இப்படித் தொப்பென்று கீழே போட்டாயே? நீயும் புத்தகம் எழுதுகிறவனாயிற்றே! உன் புத்தகத்தை ஏமாந்து வாங்குகிறவர்களும் இப்படித்தானே வீசி எறிவார்கள்?" என்று சொல்லியது.

இந்த எண்ணமானது கொஞ்சம் நஞ்சம் வரக்கூடிய தூக்கத்தையும் கெடுத்துவிட்டது. பொழுதை எப்படிப் போக்குவது என்று யோசித்தேன். பெட்டியைத் திறந்து அதிலிருந்து துணிமணிகளை அப்புறப்படுத்திச் சோதித்தேன். ரஸிகமணி டி.கே.சி. அவர்களின் கம்பராமாயணப் பதிப்பு பெட்டியின் அடியில் இருந்தது. அதை எடுத்துக் கம்பர் பாடல்களைப் படிக்கத் தொடங்கினேன். பொழுது போவதே தெரியாமல் போய்க் கொண்டிருந்தது.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் கம்பர் எழுதிய புத்தகம். நானும் நூறு தடவைக்குமேல் கேட்டும் படித்துமிருப்பேன். ஆயினும் கம்பர் பாடல் பழசாகத் தோன்றவில்லை. புத்தகத்தைக் கீழே விட்டெறியவும் தோன்றவில்லை. படிக்கப் படிக்கப் புதுமையாக இருந்தது.

பழைய காலத்து மகா மேதைகள் எழுதிய சிரஞ்சீவிக் காவியங்களுக்கும், இந்த நாளைய ஆசிரியர்கள் எழுதும் அன்றலர்ந்து வாடிப் போகும் நூல்களுக்கும் உள்ள வித்தியாசம் நன்றாகத் தெரிய வந்தது.

கம்பரைப் போற்றுவதற்காகக் கூட்டிய மகாநாடு ஒன்றில் மேற்கூறிய சம்பவத்தைப் பற்றிச் சொன்னேன். கேட்டுக் கொண்டிருந்த நண்பர்களில் ஒருவர் விழா முடிந்த பிறகு என்னிடம் தனியாக வந்து, "என்ன ஐயா! எங்களுக்கெல்லாம் அசட்டுப் பட்டம் கட்டிவிட்டீரே?" என்றார். "அடாடா! நான் ஒன்றும் அப்படிச் செய்ததாக நினைவில்லையே! பட்டம் கட்டும் வேலையெல்லாம் சர்வகலாசாலைகளைச் சேர்ந்தது அல்லவா?" என்றேன். "அதற்குச் சொல்லவில்லை. நீர் எழுதிய புத்தகங்களை நாங்கள் எவ்வளவோ ஆசையோடு வாங்கி வாசிக்கிறோம். பத்திரமாய் வைத்துப் பாதுகாக்கிறோம். சில புத்தகங்களை மூன்று நான்கு தடவை கூடப் படித்திருக்கிறோம். அப்படி இருக்க ஒரு தடவை படித்து விட்டு எறியவேண்டிய புத்தகங்களுடன் சேர்த்து விட்டீரே?" என்றார்.



'ஏதோ அவையடக்கமாகச் சொன்னேன். அதை நீங்கள் பொருட்படுத்த வேண்டாம். யார் கண்டது? வள்ளுவரும் கம்பரும் தங்கள் நூல்கள் ஆயிரமாயிரம் ஆண்டுகள் படிக்கப்படும் என்று எண்ணிக் கொண்டா எழுதினார்கள்? இல்லையே! ஷேக்ஸ்பியர் அவசர அவசரமாகப் புது நாடகம் ஏதேனும் நடிப்பதற்கு வேண்டுமே என்று எண்ணிக் கொண்டு எழுதித் தள்ளினார். அவை உலகம் உள்ளளவும் போற்றக் கூடிய சிரஞ்சீவி நூல்களாக விளங்குகின்றன. ஆகையால், ஆசிரியர்கள் உயிரோடு வாழ்ந்திருக்கும் காலத்தில் அவர்களுடைய நூல்களைப் பற்றி எதுவும் நிச்சயமாகச் சொல்ல முடியாது!" என்றேன்.

'அலை ஓசை'
முன்னுரையிலிருந்து...

"எனக்கு சின்ன வயசுலேர்ந்தே பிடிச்சது ஸ்பீடுதான். வேகம்... வேகம்... அதுதான் ரொம்ப த்ரில்லிங்." - இப்படிச் சொல்வது ஆணல்ல... ஒரு பெண். பெங்களூரின் அதிவேக கார் ரேலி ஓட்டுநரான அனிதா கோலே.

ஜீன்ஸ் ஸ்கர்ட் - டாப், கலர் தலைமுடி, பென்சில் மேனி என ஒரு மாடல் போல் மினிர்கிறார்.

"மாடல் போல இல்லீங்க... நான் ஒரு மாடலே தான். சின்ன வயசுலேர்ந்தே ஸ்பீடு பிடிக்கும்ங் கறதால, பல ரேஸ்களில் கலந்து கொண்டிருக்கிறேன். சுமார் பத்து வருஷமா ரேசில் பங்குகொள்கிறேன். முதலில் நேவிகேட்டராக (வழி சொல்பவர்) இருந் தேன். என் கணவர் ரூபேஷ் கோலே (கல்யாணம் ஆயிடுச்சா... நம்ப முடியலையே!) ஓட்டுவார். பிறகு இப்போது சில வருஷங்களாக நான் தனியே ரேலியில் ஓட்டுகிறேன். எனக்கு நேவிகேட்டர் ரஷ்மி பொப் பண்ணா. இந்தியாவிலேயே பெண்கள் டீம் எங் களுடையதுதான். பெங்களூரின் ஃபாஸ்டஸ்ட் வுமன் ட்ராஃபியை, 2001லிருந்து தொடர்ந்து வாங்கிக் கொண்டிருக்கிறேன். இந்தியன் நேஷனல் ராலி சாம்பியன்ஷிப்பிலும் பங்குகொண்டு, பரிசுகளை அள்ளியிருக்கேன்... ஒவ்வொரு வருடமும் 3 - 4 கார் ரேலிகளில் என் பெயர் இருக்கும்..." படபடவெனப் பொரிகிறார் அனிதா.

இவர் அதிவேக ஓட்டுநர் மட்டுமல்ல.... முன்னணி மாடல், நடிகை, அழகுக்கலை நிபுணர், ஃபாஷன் டிஸைனர் என பல முகங்கள் அனிதா வுக்கு.

"98ல் மிஸ் பெங்களூர் ஆனேன். அதைத் தொடர்ந்து மாடலிங் வாய்ப்புகள் வந்தன. இப்போது மாடலிங்கில் நான் பயங்கர பிஸி" என்றவர், "ஒரு



# பெங்களூர்

தெலுங்குப் படம் பண்ணி னேன். ஹீரோ சரண். ஹீரோ யின்களாக நானும் ஸ்ரேயாவும் (எனக்கு 20 உனக்கு 18 ஹீரோ யின்). எனக்கும் சரணுக்கும் பெயரில்லை. இன்று ஸ்ரேயா தெலுங்கில் டாப்... பிறகு தமிழில் ஒரு பழைய பாட்டின் ரீமிக்ஸ் வீடியோ ஆல்பத்திலும் நடித்திருக்கிறேன்..."

"அது சரி.. தமிழ் தெரியுமா?"

"நான் தமிழ்ப் பொண்ணு தாங்க. என் அம்மா தமிழ்! அப்பா தெலுங்கு" - முதன் முறையாக சுத்தமான தமிழில் செப்பினார்!

தமிழ் சினிமாவில் நடிக்க வேண்டும் என்று ஆர்வம் கொண்டுள்ள அனிதாவுக்கு சான்ஸ் எப்படி கிடைக்கும்? இங்கு குமரிகளுக்குத்தானே கொண்டாட்டம்! "ஐ நோ தட். நா ஒண்ணும் ஹீரோயின் ரோல்தான் வேணும்னு கேக்கலை. அக்கா, அண்ணி என்று எதுவா இருந்தாலும் பரவாயில்ல. ஐ லவ் கேமரா..." என்கிறார் நேர்மையாக.

அனிதா ரேஸில் ஓட்டுவது எஸ்டீம் 1300 விவி. "இத்தனை வருடங்களில் ஒருமுறை கூட என் கார் பங்சர் ஆனதில்லை. என் காரில் ஒரு சின்ன ஸ்க்ராச் கூட வந்ததில்லை. ஒரு சிறந்த டிரைவருக்கு அழகு, அவருடைய வண்டியைக் காப்பாத்தறதுதான்.

கார் ரேஸில் பெண்களுக்கென்று தனிப் போட்டி கிடையாது. நாங்களும் ஆண்களுடன்தான் போட்டியில் பங்குபெறுகிறோம். அவர்களும் எனக்கு நல்ல சப்போர்ட் தருகிறார்கள். பொதுவா பெண்களுக்கு நல்லா ஓட்ட வராதுன்னு ஒரு தவறான கருத்து இருக்கு. பல போட்டிகளில் ஆண்களைவிட நல்ல டைமிங்கில் வந்து கலக்கியிருக்கேன்" காலரைத் தூக்கிவிட்டுக் கொள்கிறார்.

'பெங்களூர் எக்ஸ்பிரஸ்' என்று தாராளமாய் பட்டம் தரலாம் அனிதாவுக்கு!

**- லதா சேகர்**

# எக்ஸ்பிரஸ்!



''உனக்குக் கல்யாணம் ஆன பிறகு, உன் முதல் மாதச் சம்பளத்தை யார்கிட்ட கொடுத்த... மனைவிகிட்டேயா? அம்மாகிட்டேயா..?''

''திருட்டுக் கொடுத்துட்டேன்.''

- உஷா

''ரஜினிகாந்த் மாதிரி ஆகணும்னு ஊரைவிட்டு ஓடிப் போனானே உங்க பையன்... ஆயிட்டானா?''

''ஓ... ஆயிட்டானே... பஸ் கண்டக்டரா!''

- என். உஷாதேவி



# ரஜினி மாதிரி



''ஆட்சியைக் கலைக்கச் சொல்லி நடக்கப்போற கூட்டம்ங்கறது சரியாத்தான் இருக்கு!''

''எப்படி?''

''மைக் டெஸ்ட் பண்றவர் 'ஹலோ... மைக் டெஸ்டிங் 3... 5... 6'ம்ங்கறாரே!''

- ஜி. லீலா

''ஃபர்ஸ்ட் லிஸ்டுல இல்லே... செகண்ட் லிஸ்டுலயும் வரலே... ஃபைனல் லிஸ்டுலதான் வரும்னு நினைக்கிறேன்...!''

''மெடிக்கல் கவுன்சிலிங்லயா... இல்லே இன்ஜினியரிங் கவுன்சிலிங் லயா...?''

''ஐயோ நீங்க ஒண்ணு... ஜெய லட்சுமி ஹிட் லிஸ்டுல நம்ம அய்யா பேரு...''

- கேஜி.எஸ். கோவிந்தன்





''மன்னர் எப்படி மயங்கி விழுந்தார்?''

''ராணியின் கூந்தலில் இயற்கை மணம் உள்ளதா, செயற்கை மணம் உள்ளதா என்று முகர்ந்து பார்த்தாராம்!''

- ஆறுமுகம்

# சிரிப்பு



''போர் வந்தால் ஒளிந்துகொள்ள இடம் தயார் செய்துவிட்டீர் களா மந்திரியாரே?''

''நம் கஜானா காலி யாகத்தான் உள்ளது மன்னா!''

- வைகை ஆறுமுகம்

# அதி!

"சாமி நிஷ்டையில் இருக்கிறார். குறைந்தது இரண்டு மணி நேரமாவது காத்திருக்க வேண்டியிருக்கும்."

சாமியின் உதவியாளர் சொல்ல, அந்த இடத்திலிருந்து கூட்டம் மெல்லக் கலைந்து, மர நிழலில் ஒதுங்க ஆரம்பித்தது.

நான் தனியாளாய் வந்ததால், அடுத்து என்ன செய்வது என்று திகைத்து நின்றேன். காலை நாலு மணிக்கெல்லாம் கிளம்பி இந்த கிராமத்துக்கு வந்தேன். மூன்று மணி நேரப் பயண அலுப்பும், விடியற் காலையிலேயே விழித்த களைப்பும் சேர்ந்து கொள்ள, ஏதாவது ஓர் இடத்தில் அமர்ந்தால் நன்றாயிருக்குமே என்று தோன்றியது.

கொஞ்சம் தள்ளி ஒரு குடிசையும், அருகே வேப்ப மரமும் கண்ணில்பட, அதை நோக்கி நடந்தேன்.

இந்த ஊர் சித்தரைப் பற்றி நண்பர் ஒருவர்தான் சொன்னார்.

எல்லாம் இருந்தும், ஏதோ இல்லாதது போல ஒரு வெறுமை என் மனசுக்குள் இருந்து கொண்டே இருக்கிறது. ஓரளவு நல்ல சம்பளம், சொந்த வீடு, மனைவி, மக்கள் என்று என் குடும்ப வண்டி நன்றாகத்தான் ஓடுகிறது. இருந்தாலும், இரவில் சரியான தூக்கமில்லை. திடுக்கென நடு இரவில் விழித்துக் கொண்டு விடுவேன். அப்புறம் சிவராத்திரிதான். மருத்துவரிடம் காண்பித்தாகி விட்டது. 'எல்லாம் மனப்பிரமைதான். உங்களுக்கு ஒண்ணுமேயில்லை' என்று கற்பூரம் ஏற்றி சத்தியம் செய்து விட்டார் மருத்துவர்.

அலுவலக வம்புப் பேச்சுகளுக்கு நடுவே நண்பர் இந்த சித்தரைப் பற்றி சொல்ல, மனசுக்குள் வாங்கிக் கொண்டு, கிளம்பி வந்து விட்டேன்.

குடிசையின் வாசலில் ஒரு பெண்மணியும், அவளின் முந்தானையைப் பிடித்தபடி ஒரு சிறுவனும் அமர்ந்திருந்தனர்.

"சாமியைப் பார்க்க வந்தீகளா ஐயா? அப்படி கல்லிலே உட்காருங்களேன்'' என்று உபசரித்தாள்.

வேப்ப மரத்தின் அடியில் மண்மேடு அமைத்து, அதன் மேல் கருங்கல்லைப் பதித்திருந்தார்கள்.



"அம்மாடி" என்றபடி அதில் போய் அமர்ந்தேன்.

"குடிக்கத் தண்ணி வேணுங்களா?"

"இருக்கும்மா" என்று பையைக் காண்பித்தேன். அதில் ஒரு தண்ணீர் பாட்டில், பிஸ்கட் பாக்கெட், ஒரு வேட்டி, துண்டு இருந்தன.

வேப்பமரத்தின் அடி மரத்தில் முதுகை வைத்து ஆசுவாசப்படுத்திக் கொண்டேன்.

ஊர் சிறிய கிராமம்தான். பட்டணத்தை இணைக்கும் நெடுஞ்சாலைக்கு அருகில் உள்ளதால், வந்து போக சௌகரியம்.

"சாமி, இங்கே வந்து தங்கினப்புறம்தான் ஊருக்குள்ளே ஜன நடமாட்டத்தையே பார்க்க முடியுது."

என் மனதைப் படித்தவள் போல் சொன்னாள்.

"ஆறு மாசம் முன்னாடிதான் சாமி திடீர்னு வந்தாக நம்மூருக்குள்ளே. சின்னப் பசங்களோட சிரிச்சுப் பேசி விளையாடுவாரு நல்லா. அவரோட சக்தி கொஞ்சங் கொஞ்சமாய் பரவ ஆரம்பிச்சப்புறம், வெளியூரிலிருந்தும் உங்களை மாதிரி ஆளுங்க

# கிருஷ்ணா

வராங்க" என்றாள்.

அப்போது அவள் மகன் அவளைப் பிடித்து இழுத்தான்.

"என்னடா, பசிக்குதா? இரு."

எழுந்து உள்ளே போனாள். வரும் போது அவள் கையில் மண்சட்டியும், அதில் சோறும் இருந்தது.

"சாப்பிடறீங்களா சாமி?"

"இல்லைம்மா. பையனுக்குக் கொடு" என்றேன்.

"வாடா, இப்படி உட்காரு."

கல் ஒன்றை எடுத்து எறிந்து விளை



யாடிக் கொண்டிருந்தவனை அழைத்து, உட்கார வைத்து, ஊட்டி விட ஆரம்பித்தாள்.

நாலு வாய் சாப்பிட்டதுமே, அந்தச் சிறுவன் போதுமென்று கையால் தடுத்தான்.

"உதைபடுவே. எப்படிடா போதும்?" என்று செல்லமாய் அதட்டினாள்.

"ம்ஹூம்" என்று வாயில் சோற்றை வைத்துக் கொண்டு தலையசைத்தான் சிறுவன்.

"வளருகிற பய நீ. சாப்பிடுடா."

அவர்களின் அந்த நிலையும், பேச்சும், மறுப்பும் எனக்கு என் பால்ய வயதையும் அம்மாவையும் நினைவூட்டின.

நாங்கள் வளர்ந்ததும் கிராமம்தான். அப்பா சிறுவயதிலேயே இறந்துவிட, அம்மாதான் எங்களை கஷ்டப்பட்டு வளர்த்தாள்.

நானும், தம்பியும் என்றால் அம்மாவுக்கு உயிர். கிட்டத்தட்ட எனது பன்னிரண்டு வயதுவரைகூட அம்மா எங்களுக்கு ஊட்டிவிட்டிருக்கிறாள்.

"நல்லா சாப்பிட்டால்தானே, நல்லாப் படிக்க முடியும். நல்லாப் படிச்சு, பெரிய வேலைக்குப் போய், என்னை உட்கார்த்தி வைச்சு சோறு போடணும். யாரு என்னை வைச்சுப்பீங்க உங்க கூட?"

"நான்தான்" என்பான் தம்பி.

"போடா, என்னோடதான் அம்மா இருப்பாங்க. நான்தானே பெரியவன்" என்பேன் நான்.

உடனே தம்பி அழ ஆரம்பிப்பான்.

"என்னை ஏன் முதல்ல பெத்துக்காம, ரெண்டாவதாய் பெத்துக்கிட்டே."

அம்மா எங்கள் இருவரையும் சேர்த்து அணைத்துக் கொள்வாள்.

"இரண்டு பேரும் ஒரே வீட்டிலிருந்தால் நாம எல்லோருமே சேர்ந்து இருக்கலாமே" என்பாள்.

"ஹையா!" என்று நானும், தம்பியும் கைதட்டி சந்தோஷப்படுவோம்.

வாரத்திற்கு ஒரு முறையாவது இப்படி ஏதாவது சண்டை போடுவோம் நானும், என் தம்பியும். எல்லாமே அம்மாவைச் சுற்றித்தான் இருக்கும். காரணங்கள்.

"இது அம்மாவுக்காகவாம்! ஒரு வாய் சாப்பிடுடா ராசா. நல்லா, சாப்பிட்டுப் பெரியவனானால் தானே உழைச்சு, அம்மாவை உட்கார்த்தி வைச்சு சோறு போட முடியும்?"

அந்தப் பெண்மணி, தன் மகனிடம் கொஞ்சிக் கெஞ்சுவதை பார்த்தபடி இருந்தேன்.

அம்மாக்கள் எல்லோருமே ஒரே மாதிரிதான் போலும் உலகத்தில். ஆனால் அவர்களின் குழந்தைகள்தான் வளர்ந்து பெரியவன் ஆனதும் வேறுபட்டுப் போகிறார்கள்.

அம்மாவை யார் வைத்துக் கொள்வது என்று எனக்கும், என் தம்பிக்கும் சிறு வயதில் ஏற்பட்ட சண்டை போலவே தான் இப்போதும் நடந்தது. ஆனால் சிறு வேறுபாடு. அம்மாவை 'நீ வைத்துக் கொள்' என்று நானும், அவனும் இப்போது சண்டை போடுகிறோம். பலன், அம்மா இப்போது முதியோர் இல்லத்தில் இருக்கிறாள்.

வேப்பங்காய் ஒன்று என் தலையில் விழ, சுரீரென்று வலித்தது. கூடவே என் தவறு புரிந்ததாலும் மனது வலித்தது. என் மன வெறுமையின் காரணம் புரிய எழுந்தேன்.

"என்ன சாமி எழுந்துட்டீங்க?"

"கிளம்பறேம்மா."

"ஏன்? சாமியைப் பார்த்து ஆசி வாங்கலியா?"

"ஆசி வழங்கிட்டாரும்மா" என்ற என்னை விளங்காமல் பார்த்தாள்.

பையிலிருந்த பிஸ்கெட் பாக்கெட்டை அந்தச் சிறுவனிடம் தந்தேன். சித்தர் இருந்த திசை நோக்கிக் கை கூப்பினேன்.

அம்மாவை உடனே பார்க்கும் ஆவலில் வேகமாய் நடந்தேன், பேருந்தைப் பிடிக்க. ○

"உங்களுக்கு சுகர் இருக்கு... ஆஸ்துமா இருக்கு... பி.பி. இருக்கு... கேன்சர் சிம்டம்ஸ் இருக்கு தவிர...!"

"பெயரை வசூல்ராஜான்னு மாத்திக்கிட்ட உங்ககிட்டே ட்ரீட்மெண்ட் எடுத்துக்கிற எல்லாத் தகுதியும் என்கிட்டே இருக்கு. அதானே சொல்ல வர்றீங்க!"

- கே.ஜி.எஸ்.



செய்யும் தொழிலே தெய்வம் என்று மனப்பூர்வமாகக் கருதிய டாக்டர் சஞ்சீவி, அதைச் செயலிலும் காட்டியவர்!

அரசாங்கத்தில் உயரதிகாரியாய் இருந்தவரின் மகனுக்கு உடம்பு முடியவில்லை. சிகிச்சை அளிக்க டாக்டர் சஞ்சீவியை அழைத்தார்கள். 'இன்று ஆஸ்பத்திரியில் நோயாளிகள் சேரும் நாள், அதனால் காலையில் வர இயலாது; மாலையில் வேலை முடிந்த பிறகு வந்து பார்க்கிறேன்' என்று அவர் சொல்லி விட்டார்.

அரசு மருத்துவர் என்ற போதிலும், அதிகார தோரணைக்குப் பணிய மறுத்தவர்.

1957ல் அரசுடன் உண்டான மனக் கசப்பு காரணமாய் வேலையை ராஜினாமா செய்தவர், 1958ல் தமது நீண்ட நாள் கனவை நனவாக்கும் விதமாய் வி.எச்.எஸ்.ஐத் துவக்கினார். தரமணியில் அதன் கட்டடம் தயாராகும் வரை, வீட்டிலேயே ஆஸ்பத்திரியை நடத்தினார். இன்றைக்கு ஆயிரக்கணக்கான ஏழைகளுக்கு இலவசமாய் மருந்து, உணவோடு கூடிய சிகிச்சையைத் தரும் மருத்துவ மனையாக, 405 படுக்கைகளோடு வாலன்டரி ஹெல்த் செர்விஸஸ் (வி.எச்.எஸ்.) வளர்ந்திருக்கிறதென்றால் அதற்கு அடியுரமாய், அஸ்திவாரமாய் டாக்டர் சஞ்சீவியின் உழைப்பு இருந்திருக்கிறது.

# வசூல் அறியாத ராஜா!

• டாக்டர் சஞ்சீவி

நடுத்தர பிராமணக் குடும்பத்தில் 1903-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 27ம் தேதி பிறந்தார் சஞ்சீவி.

பள்ளி நாட்களில் அன்னிபெசன்ட் அம்மையார் மற்றும் காந்திஜியின் சிந்தனைகளால் ஈர்க்கப்பட்டார்.

மாணவப்பருவத்திலேயே சேரி ஒன்றில் இரவுப் பள்ளிக் கூடத்தையும், மருத்துவப் பட்டம் பெற்ற கையோடு ஏழைகளுக்கென இலவச மருத்துவ மனையையும் நடத்தினார்.

இங்கிலாந்திலுள்ள கார்டிஃப் மருத்துவப் பல்கலைக்கழகத்தில் மேற்படிப்பை முடித்து, இந்தியாவுக்குத் திரும்பினார். 1928ல் மெட்ராஸ் மெடிகல் சர்வீஸஸில் மருத்துவராகவும், ஆசிரியராகவும் பணியில் சேர்ந்தார். சிறந்த மருத்துவ சேவைக்காக 'பத்ம விபூஷண்' பெற்றார்.

"பரிசோதனைக் கூடங்கள் தரும் ஆய்வு முடிவுகளைக் கொண்டு ஒரு முடிவுக்கு வருவதற்கு முன், சம்பந்தப்பட்ட நோயாளியிடம் மனம் விட்டுப் பேசி, நோயின் அறிகுறிகளை இனம் கண்டு கொள்வார் டாக்டர் சஞ்சீவி" என்கிறார் அவருடைய மாணவரும், மூத்த மருத்துவருமான டாக்டர் கே.வி.திருவேங்கடம்.

இன்னொரு மாணவரான என்.எஸ். முரளி, வி.எச்.எஸ்ஸின் ஆரம்பம் முதல் அதன் செயலாளராகச் செயல்படுகிறார். "சமுதாயத்திலுள்ள அனைவரும் சமம் என்று அழுத்தமாய் நம்பி, ஏழை, பணக்காரர் என்ற பாகுபாடின்றி, சிறந்த மருத்துவ சிகிச்சை ஒவ்வொருவருக்கும் கிட்ட வேண்டும் என்று வாழ்நாள் முழுவதும் பாடுபட்டவர் சஞ்சீவி" என்கிறார் டாக்டர் முரளி.

டாக்டர் சஞ்சீவியின் நூற்றாண்டை வி.எச்.எஸ். அமைப்பும், சென்னையின் முன்னணி மருத்துவர்களும் இவ்வாண்டு பல நிகழ்ச்சிகள் மூலம் கொண்டாடி வருகிறார்கள்.

- சூர்யபுத்ரி

"மொறம் மொழுவலியோ...
மொறம் மொழுவலியோ..."
குரல் கேட்கிறது. சுடுநீர் ஆவியாகும்
நகரச் சாலை, ஹாரன் ஒலிக்கும்பலில்
ஓர் எளிய கலையுடன். சாணம் நம்பி,
குழைத்துப் பூசும் தன் மெலிய விரலை நம்பி,
நகரும் அவள் ஒரு கிழவியல்ல;
நகர்மயமாகிப் போன நம் மனதின் வலி.
முறம் இல்லையெனில்
விலைக்கு வாங்கியாவது முறம் மெழுகுங்கள்.
இரண்டு ரூபாய்க்கு ஐந்து கேட்பினும் தரவும்.
சாதாரணச் சாண உருண்டைகளின் பின்புறம் -
அவள் பேணும் இந்தியாவின் முதுகெலும்பு உள்ளது;
ஒரு பசு உள்ளது -
அறிய மறுக்கும் நம் அறியாமை கலந்து.

# சேரவாரும் ஜெகத்தீரே

பா.சத்தியமோகன்





# ஆக்ஸிஜன் நினைவுகள்

எப்போதுமே குனிந்திருக்கும் உன்
முகம் பார்த்த பிறகுதான்
நிமிர்ந்தது என் கற்பனை

கண் மூக்கு செவி செவ்வாய்
இவற்றால் ஆனதல்ல உன் முகம் என
விளங்கிக்கொள்ள வெகு நாளானதெனக்கு.

நீ சிந்திய வார்த்தைச் சொட்டுகள்கூட
காற்று கண்ணயர்ந்தபோது
கண் திறந்தவை

அசைவுகளற்ற உன் மௌனத்தின்
மரண வாசனை எனக்கு
மிகவும் பிடித்திருக்கிறது

வேண்டாம், வேறெதுவும் சொல்லிவிடாதே
உன் மௌனச் சிலுவையிலிருந்து
உயிர்த்தெழுகிறது
என் வாழ்வு

நாகூர் ரூமி

சில தினங்களுக்கு முன்பு, முக்கியமான படைப்பாளி ஒருத்தரின் சமீபத்திய படைப்பை வாங்கிய போது, கூடவே ஒரு இலவச இணைப்பும் கிடைத்தது. அந்த இலவச இணைப்பு, நீங்கள் நினைக்கிறாற் போல ஊதுவத்தியோ, ஊறுகாய் பாக்கெட்டோ, ஜோதிகா ப்ளோ - அப்போ அல்ல. ஒரு நாலு பக்க பாம்ப்லட். சிறு கட்டுரை. ஒரிஜினல் பிரதியைப் படித்துப் புரிந்து கொள்ளுவதற்கான விளக்க உரை போல இருந்தது அது. தேவுடா!

இதெல்லாம் வேலைக்காகாது என்று, வாங்கிய அந்த நூலை ஈசானிய மூலையில் சார்த்திவிட்டு, போகோ சானல் பக்கம் திரும்பி விட்டேன் என்றாலும், தமிழில் எழுதப்பட்ட ஒரு நவீன இலக்கிய ஆக்கத்தைப் படித்துப் புரிந்து கொள்ள, விளக்க உரை தேவைப்படும் நிலைமை சற்று விசித்திரமாகத் தான் இருந்தது. வெகு ஜனப் பத்திரிகைகளின் விசுவாசமான வாசகர் ஒருவர், தம் இரசனையை இன்னும் விஸ்தரிக்கும் பொருட்டு, இது போன்ற நவீன இலக்கியத்தின் புரியாத பக்கத்தைப் புரட்டினால், அவருடைய ரியாக்ஷன் என்னவாக இருக்கும் என்று யோசித்துப் பார்க்கவே வேடிக்கையாக இருந்தது. புரியாத இந்த வகை இலக்கியங்கள் யாருக்காகப் படைக்கப்படுகின்றன என்பது மில்லியன் டாலர் கேள்வி.

நவீன இலக்கியத்தின் போக்கை இன்று நான்கு வகையாகப் பிரித்து விடலாம். ஒன்று, நவீன இலக்கியங்கள் நேரடியாகப் புரியாத வண்ணம் சுற்றி வளைத்துச் சொல்லப்பட்டிருக்க வேண்டும். இரண்டாவதாக, கருத்து என்னவாக இருந்தாலும், அவை வட்டார வழக்கில் சொல்லப்பட்டிருந்தால் அதற்கு தனி மரியாதை உண்டு. மூன்றாவதாக , மேற்கோள்கள் காட்ட வேண்டுவதற்கு ஃப்ரெஞ்சு, இத்தாலிய, லத்தின் அமெரிக்க எழுத்தாளர்கள் கிடைத்தால் உத்தமம். இறுதியாக படைப்பிலக்கியம் மேஜிக்கல் ரியலிஸம், போஸ்ட் மாடர்னிஸம், என்று ஏதாவது ஒரு இசத்தை வலியுறுத்துவதாகவே, சார்ந்தோ இருக்க வேண்டும்.

> மனைவிமார்களின் கடைக்கண் முறைப்பு, நர்சரி க்ளாஸ் அட்மிஷன், ஆபீஸ் முதலாளி என்று பயப்பட நமக்கு வேற வஸ்துக்களா இல்லை? 'நவீன இலக்கியவாதிகளிடமும் அதே போல அச்சம் கொள்ள வேண்டுமா?'

இந்த இலக்கணத்தை ஒட்டி இருந்தால், அவற்றுக்கு அங்கீகாரம் கிடைக்கும். உபரியாக பரிசுகளும் பாராட்டும் கிடைக்கலாம்.

நவீன இலக்கியவாதிகளால் மிகவும் சிலாகிக்கப்பட்ட நூல் ஒன்றை வாசிக்க முற்பட்டபோது, நான்கு பக்கங்களுக்கு மேல் தாண்ட முடியவில்லை என்றால், சிக்கல் இரண்டு இடங்களில் இருக்கலாம். அந்த நூலைரி புரிந்து கொள்ளத் தேவையான அறிவு வாசகரிடம் இல்லை. அல்லது வாசகர் புரிந்து கொள்ளக் கூடிய மொழியில் எழுத அந்த எழுத்



# புரியாத இல்லையா?

தாளருக்குத் தெரியவில்லை. என்னைக் கேட்டால், வாசகனுக்குப் புரியக் கூடிய மொழியில், நடையில் எழுத வேண்டிய பொறுப்பு எழுத்தாளருக்குத்தான் அதிகமிருக்கிறது என்பேன். ஒரு பீடத்தில் அமர்ந்து கொண்டு, 'நான் எழுதுவதை நீங்கள் புரிந்து கொள்ளக் கடமைப்பட்டவர்கள்' என்ற தொனியில் எழுதப்படும் இலக்கியம், அறிவுஜீவி அகந்தையின் (intellectual arrogance) வெளிப்பாடாகத்தான் தோன்றுகிறது.

அறிந்த வரையில், இலக்கியப் பரிச்சயம் ஏற்படுகிறவர்களிடம் ஒரு பொதுத் தன்மை இருக்கிறது. பள்ளிப் பருவங்களில், அம்புலிமாமா, பாலமித்ரா, கோகுலம் போன்ற பத்திரிகைகளில் துவங்கி, அவரவர் வாசிப்பு ரசனைக்கேற்ப, வெகுஜனப் பத்திரிக்கைகளிடம் தஞ்சம் அடைகிறார்கள். வெகுஜனப் பத்திரிகைகளில் வரும் படைப்புகளுக்கு மாற்றாகவோ, அல்லது அடுத்த படியாகவோ, வாசகன் சென்றடைய நினைப்பது, உயர் ரக இலக்கியங்களைத்தான். எத்தனையோ பல எழுத்தாளர்கள், தேர்ந்த ரசனையாளர்களுக்கான படைப்புக்களை அளித்து வந்த வண்ணம் இருந்திருக்கிறார்கள். புதுமைப்பித்தன் கூட, மனித உணர்வுகளை ஒதுக்கிவிட்டு, அறிவுத் தளத்தில் மட்டுமே நின்று கொண்டு எழுதவில்லை. அவர்களுடைய கருத்துகள் நவீனமானதாக இருந்தாலும், தங்கள் மொழியிலும், நடையிலும் எளிமை காட்டி, வாசகனை அரவணைத்துச் சென்றார்கள்.

ஆனால் தற்போதைய படைப்பாளிகள் என்ன செய்கிறார்கள்? வெறுமனே பயமுறுத்துகிறார்கள். மனைவிமார்களின் கடைக்கண் முறைப்பு, நர்சரி ஸ்கூல் அட்மிஷன், ஆபீஸ் முதலாளி என்று பயப்பட, நமக்கு வேற வஸ்துக்களா இல்லை? 'நவீன இலக்கியவாதிகளிடமும் அதே போல அச்சம் கொள்ள வேண்டுமா?' என்பதுதான் என் கேள்வி.

மொழியை எளிதாகக் கையாளத் தெரிந்தவர்கள், கடினமான நடையில் எழுதினாலும் புரிந்து கொள்ளக் கூடியதாக இருக்கும். ஆனால் பயிற்சி இல்லாமல் சில ஜல்லியடி வார்த்தைகளை மட்டும் வைத்துக் கொண்டு, நவீன இலக்கியம் படைப்பவர்கள் சோர்வைத்தான் தருகிறார்கள். சொல்ல வருகிற கதையை விடவும், பதிவு செய்ய நினைக்கிற வாழ்க்கையை விடவும், சொல்கின்ற



## இகாரஸ் பிரகாஷ்

உத்திதான் பெரிதாக நினைக்கப்படுகின்றது. சோதனை முயற்சிகள் தேவைதான் என்றாலும், இந்தச் சோதனை முயற்சிகள் தாம் இன்றைக்கு வெகுவாக, நவீன இலக்கியத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கின்றன.

"சோபாவில் காலை ஆட்டிக் கொண்டு படிப்பவர்களுக்கான இலக்கியம் இது அல்ல, மக்களுடைய வாழ்க்கையைப் பிரதிபலிப்பது, அடித்தட்டு மக்களுக்கானது" என்று சொல்பவர்களிடம், "அப்படியானால், அவர்கள் படித்து இன்புறும் வகையிலான, டிக்ஷனரி தேவைப்படாத இலக்கியம் எங்கே?" என்பதாகத்தான் என் கேள்வி இருக்கும். ○

தாமரையின் ஒரே ஆசுவாசம் அவளுடைய மாமனார் தியாகராஜன் தான். சென்னையில் கைவிட்டு எண்ணக்கூடிய கோடீசுவரர் வீட்டிற்கு மணமகளாக வாழ்க்கைப்பட்டிருப்பது தெரிந்தபொழுது, தாமரைக்குப் பிரமிப்பாய் இருந்தது. இப்படி, அப்படி என அவர்களுடைய பழக்க வழக்கங் களைக் கற்றுக் கொள்வதற்குள்ளேயே ஒரு மாதம் ஓடிப்போனது. உடை உடுத்திக் கொண்டால் அது ஒரு தனிக் கலையாய்க் கற்றுக் கொள்ள வேண்டி இருந்தது. சாதாரணப் பின்னல் என்றால்கூட அழகுக்கலை நிபுணர் கடைகளுக்குத் தான் போக வேண்டும். புருவம் தீட்டிக் கொள்வதிலிருந்து, நகச் சாந்து இட்டுக் கொள்வது வரையில், எல்லாவற்றிற் கும் ஒரு கலை நயம் வேண்டி இருந் தது. ஒரு அழகு வேண்டி இருந் தது.

''அலங்காரம் செய்து கொள்ளவே நேரம் ஒதுக் கினா, பெண்களுக்கு வேறு சிந்தனையே இல் லாமப் போயிருமே'' என் றாள் மாமியார் சிவ காமியிடம். மாமி யாரிடம் பேசுவதற்குக் கூட வேறு ஒரு மொழி தேவைப்பட்டது.

சிவகாமி தனது சிகையில் கறுப்புச் சாயம் பூசிக் கொள்வது, தனிப் பட்டுப் புடைவைகளாய் சேலம் தறியிலிருந்தும், காஞ்சிபுரம் தறியிலிருந்தும் தருவிப்பது ஆகியவற்றில் அக்கறை செலுத்தினாலும், அவருக்குக் கொஞ்சம் தமிழ் இலக்கிய அறிவு உண்டு. சொற்பொழிவுகள், இலக்கியப் பேருரை, பாட்டுக் கச்சேரிகள்



என, அவருடைய ரசனை கொஞ்சம் வேறுபட்டதாக இருந்தது. எந்தவித நிகழ்ச்சியாக இருப்பினும் அழைப்பிதழும், இலவச அனுமதிகளும் தாமாகவே தேடி வரும் செல்வக்குடி.

"இளவட்டங்களுக்கு இப்பல்லாம் வேற எதப்பத்தி சிந்தனை? டெலிவிஷனில் தெனம் அழகு சம்பந்தமான நிகழ்ச்சி இல்லாம இருப்பதே இல்லையே."

"பெண்கள் அழகுபடுத்திக் கொள்வதில் தப்பில்லை. ஆனா வெறும் அழகு மட்டுமே முக்கியமாப் போகறப்பதான் சந்தேகப்பட வைக்குது, நாம நல்ல பாதையில் போறோமான்னு... என்றாள் தாமரை. அவளால் இப்பொழுது வெளியில் வந்து விவாதம் செய்ய முடிகிறது. வாழ்வில்



அவளை மீறி விஷயங்கள் நடந்தபொழுது, அவளால் எதிர்க்க முடியவில்லை. மௌனமாகவே இருக்க முடிந்தது. திருஞானத்தின் வெளியில் சொல்ல முடியாத கீழ்த்தரமான செயல்களால், அவள் முதல் இரண்டு மாதங்கள் அதிர்ந்து போய் விட்டாள். மன அழுத்தம், அவமானம், குற்ற உணர்வு, கதிரேசனின் நினைவு என மாறி, மாறிச் சூழன்றபொழுது ஓடிப் போய் விடலாமா, எதையாவது குடித்துத் தற்கொலை செய்துகொண்டு விடலாமா எனத் தோன்றும். பயனில்லை; இயலாது எனத் தெரிந்ததும் தெளிந்தாள். கெட்ட விஷயங்களையும் மனதுக்கு ஒவ்வாத விஷயங்களையும் தவிர்த்து, நல்ல விஷயங்களில் மனத்தைச் செலுத்தத் தொடங்கினாள்.

"மிகப் பெரிய நூலகம் மாடியில் உண்டு. உனக்குத் தேவையான புத்தகங்களைப் படிக்கலாம்" என்றாள் மாமியார்.

மெய்யாகவே பெரிய நூலகம். ஒரு பெரிய கூடம் முழுவதும் இரும்புத்



தட்டுகளில் எல்லாவிதமான தலைப்புகளிலும் புத்தகங்கள். ஆச்சரியப்பட்டுப் போனாள். புத்தகங்களின் தலைப்புகள் எல்லாவற்றையும் படிக்கவே ஒரு மாத கால அவகாசம் ஆகும் போலிருந்தது. சாப்பிடுவது, குளிப்பது போன்ற நேரங்கள் தவிர்த்து, மற்ற எல்லா நேரங்களையும் நூலகத்திலேயே செலவழித்தாள். மாமியார் காலை, இரவு இரு நேரங்களிலும் மகனுக்கு உணவு பரிமாற மட்டுமே மருமகளை எதிர்பார்த்தாள். தாமரையிடம் போலியான அன்பு, போலியான மரியாதை இலை இல்லாமல் இருந்ததாலேயே சிவகாமி ஆச்சிக்கு தாமரையைப் பிடித்துப் போனது. ஒரு துரும்பைக்கூட ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு நகர்த்த வேண்டாம். எல்லாவற்றிற்கும் பணியாள் உண்டு. அவர்களை நிர்வாகிக்க கணக்குப் பிள்ளை உண்டு. எனவே, பொழுதுக்கும் தாமரை நூலகத்திலேயே கிடந்தாள்.

ஏன் இவ்வளவு பெரிய வீட்டில் மருமகளாக வர வேண்டும் என்பதை திருஞானம் முதலிரவன்றே அவனுடைய போதைப் பழக்கம் மூலம் பதில் சொல்லி விட்டான். பெரும்பாலும் இரவுகளில் நேரம் தாழ்த்தியே வருவான். அல்லது வரவில்லை என்றால் தொலைபேசியில் சொல்லி விடுவான், இரவில் அவன் வீட்டிற்கு வரும் எல்லா நேரங்களிலும் மது அருந்தி விட்டுத்தான் வருவான். சிவகாமி அருகில் வர மாட்டாள். மறுநாள் காலையில் விசாரிப்பாள், அவன் எத்தனை மணிக்கு வந்தான், எந்த நிலையில் வந்தான் என்று.

"உன் கைலதான் இருக்கு தாமரை, அவனைத் திருத்திக் கொண்டு வருவது" என்பாள் சிவகாமி. தாமரையை அவளுடைய கோணத்திலிருந்து அவரால் புரிந்து கொள்ள முடிந்தது. அந்தப் புரிதல் அவள் மேல் ஓர் பரிவையும் மதிப்பையும் கூட்டியது. அதற்கு மேல் அவள் விமோசனத்திற்கு அவரால் செய்யக்கூடியது எதுவுமில்லை.

"அதுக்குப் பேசாம உங்க மகனை ஒரு டீச்சருக்குக் கட்டி வெச்சிருக்கலாமில்ல?" என்று ஒருநாள் மாமியாரிடம் சிரித்துக் கொண்டே கேட்டுவிட்டாள்.

''வெல் ஸெட் தாமரை'' என பாராட்டிய மாமனார் தியாகராஜனை, அன்றுதான் அருகிலிருந்து பார்த்தாள். மிகப் பெரிய நிறுவனத்தின் தலைவர். பல அமைப்புகளின் தலைவர். இருபத்து நாலு மணி நேரமும் சுறுசுறுப்புடன் இயங்கும் தொழில் அதிபர்.

சிவகாமிக்கு கதிரேசனைப் பற்றி எதுவும் தெரியாது. மகனுடைய நடவடிக்கைகள் தெரியும் என்றாலும், இதற்காக தாமரை வருத்தப்படுவது என்பது சில காலமே என்றும், ஏதாவது ஒரு எல்லையின் விளிம்பில் மகன் திருந்தி விடுவான் என்றுமே நம்பினாள். மகனது நடவடிக்கைகள் சரியில்லை என்பது, சிவகாமியைப் பொறுத்தவரையில் ஏற்கனவே பழகிப் போன ஒன்று.

''அவன் பேரென்ன?'' என்றான் ஒருநாள் நடு இரவில் தாமரையை எழுப்பி. கண்கள் சிவந்து, மதுவின் நெடி அதிகம் வீசியது.

அவளுக்கு ஒன்றும் புரியவில்லை.

''அதான்ஞ்ச, பழனி பாத யாத்திரையப்ப உன்னை கைகோத்துட்டு வந்தானே?"

பேசாமல் நின்றான்.

"சொல்லு."

பேசவில்லை.

"நான் கேட்டா பதில் சொல்லணும். அவன் பேர் என்ன?"

"நான் கிளிப்பிள்ளையோ, நீங்க கூட்டிட்டு வந்த பொம்மையோ இல்லை. நான் ஒரு பெண்."

"அய்ய்! டயலாக் வுட ஆரம்பிச்சுட்ட

"ஓட்டப் பந்தயத்தில் கடைசியில் வருகிறாரே..."

''ஊக்க மருந்துக்குப் பதில் தூக்க மருந்து சாப்பிட்டு விட்டாராம்...''

- எஸ். மோகன்



பார்த்தியா? பத்து லட்ச ரூபாய் அட்வான்ஸ் கொடுத்திருக்கேன்ஞ்ச, உன் அண்ணங்காரனுக்கு. கனுவா நாலு ஏஜன்ஸி. காரைக்குடி ரோட்ல உங்கண்ணன் காரில போறான்னா, யாரு காரணம்? நான் மொத்தமா ஒரே செக் கிழிச்சு ஒன்ன விலைக்கு வாங்கிட்டேன். சொல்லு! அவன் பேரு என்ன?"

"நீங்க என்னைச் சிறுமைப்படுத்திக்கிட்டேயிருந்தா, நான் உங்களை விட்டு மேலும் மேலும் விலகிப் போயிடுவேன்னு தோணாதா?"

"தோணாதுடி. எனக்கு மனைவி ஒரு அந்தஸ்து. நான் போட்டுக்கற புஷ் - கோட் போல; அதில் சொருகிக்கிற தங்கப் பித்தான் போல - மனைவி ஒரு அந்தஸ்து மட்டும்தான். பங்காளிங்க கூட்ற எடத்துக்குக் கூட்டிட்டுப் போறதுக்கு மட்டும்தான் எனக்கு மனைவி. சொல்லு! அவன் பேரென்ன?"

"யாரு பேரு?"

"பார்த்தியா, எவன் பேருந்தானே கேட்டிருக்கணும்? அந்த அவனை அவன்னு சொன்னா பாவம்னு, யாரு பேருன்னு மாதிரி கேக்குறியே! சாமர்த்தியந்தான்ஞ்ச."

தாமரை திரும்பி நின்று கண்ணீர் விட்டாள். அவள் கண்ணீரை தன் விரல்களால் ஏந்தி ஒரு கண்டு கண்டிவிட்டு, தாமரையிடம் "இன்னிக்கு இது போதும். போயி படு" என்றான்.

**வி**ருந்துகளுக்கு அவனுடன் காரில் செல்ல வேண்டி வரும். அந்த தினங்கள் கொடூரமானவை.

"இந்த நெக்லேஸ் எவ்வளவு தெரியுமா? ஒண்ணேகால் லட்சம். இம்போர்டட் டைமன்ட்ஸ். எப்படி டாலடிக்குது பாரு" என்பான்.

அவள் பேச மாட்டாள்.

"உன் கலியாணத்துக்கு முன்னால இந்த மாதிரி நகையெல்லாம் கண்ணால பார்த்திருக்கியா?"

அவள் பேச மாட்டாள்.

அவளது மௌனம் அவனது குரூரத்தை அதிகப்படுத்தும்.

"இல்லை, கேள்வியை மாத்திக் கேக்கறேன். கல்யாணத்துக்கு அப்புறம் இந்த மாதிரி நகையெல்லாம் போட்டுக்க முடியுமான்னு யோசிச்சிருப்பியா?"

"பெண்களுக்கு நகை அவர்களை மேலும் மேலும் பின்னடையச் செய்யற விஷயம்."

"பிரமாதம்!" கேலியாகச் சிரித்தான்.

"இங்க பாரு! இது உனக்குக் கிடைச்ச மிகப் பெரிய அதிர்ஷ்டம்னு நெனச்சுக்க. காசு, பணம், காரு, பங்களா இதெல்லாம் இப்ப இருக்கும் கன்ஸ்யூமர் உலகத்தில் அப்படி ஒண்ணும் சுலபமா கெடச்சிடாது. உனக்குப் பிடிக்குதோ, பிடிக்கலையோ, எல்லார் முன்னாலும் நடிக்கக் கத்துக்க" என்பான்.

ஆனால் இது போன்ற மிகப் பெரிய பார்ட்டிகளில் அவளுடைய நிலை மோசமாகவே இருக்கும். திருஞானத்தின் மனைவி என்றதுமே, எல்லாருக்கும் அவள் அவனுடைய மோசமான நடவடிக்கை காரணமாக விலைக்கு வாங்கப்பட்டவள் எனவும், அவளுடைய பிறந்த வீடு தங்களது பிறந்த வீடுகளைப் போல செல்வக்குடியில் வந்தது இல்லை என்பதும் தெரிந்து போய், அவளை ஒதுக்க ஆரம்பித்தார்கள். 'தன் மனைவி இப்படிப்பட்ட அவமானங்களைச் சந்திக்க நேரிடுகிறதே என்ற அவமான



"கிணத்துல விழுந்த குழந்தையை மெனக்கெட்டு மேலே தூக்கின நீ, எதுக்குடா மறுபடியும் கிணத்துலயே போட்டே?"

"எடுத்ததை எடுத்த இடத்துல வைக்கணும்னு எங்க அப்பா சொன்னது ஞாபகம் வந்துடிச்சே...!"

- சீர்காழி வி. ரேவதி



## கைவிட்ட கஸ்தூரிராஜா!

உதயாவும், ஒரிஸ்ஸாவின் கலிங்கத்துக் கவிதை நேகாவும் 'ஆசாமி' படத்துக்காக ஜோடி சேர்ந்திருக்கிறார்கள். 'காதல் ஜாதி' படத்தில், மாடு மேய்க்கும் கிராமத்து இளைஞனாக நடித்து கஷ்டப்பட்ட உதயாவா இது! "காதல் ஜாதி வந்திருந்தால் என் தலையெழுத்தே மாறியிருக்கும். கஸ்தூரிராஜாவை நம்பினேன். கைவிட்டு விட்டார். இப்போது என்னை கைதூக்கிவிடப் போகிற படம் ஆசாமி!" என்கிறார் உதயா. நேகா, படிப்பை பாதியில் விட்டுவிட்டு ஃபிலிம் டெக்னாலஜிக்கு புலம் பெயர்ந்துவிட்ட இளமைப் புயல்.

– ஸ்ரீ

உணர்ச்சி கூடவா ஒரு கணவனுக்கு இல்லாமல் போகும்' என அவன் வேதனைப்படுவான். பொஸஸிவ்னெஸ் என்பதற்கு, அவன் குரூரமான முறையில் விளக்கம் கொடுத்தான்.

''கட்டிப் புடியேன். ஜடமா நீ?'' என்றான் ஒரு நாள்.

அவள் எந்திரம் போல் கிடந்தாள்.

''கதிரேசன்னு நெனச்சிட்டு கட்டிப் புடி'' என்றான் அடுத்த நிலையில் இறங்கி.

''எனக்கு கதிரேசன் பத்தின நினைப்பு இல்லை.''

''பொய் சொல்லாத. உளவியல்படி செக்ஸ்னா...''

''ஸ்டாப்.'' அவள் கையெடுத்து இரைஞ்சினாள்.

''கதிரேசனைப் பத்தின நினைப்பு உங்க மனசிலருந்து போகவே போகாதா?'' என்றாள்.

''என் மனசிலிருந்தா? உன் மனசிலிருந்தா?''

''அப்படி ஒரு பொஸஸிவ்னஸா?''

''அய்ய்! பார்த்தியா, கொஞ்சம் அசந்தா மடக்கிப் போடப் பார்க்கிறியே. என்னவோ ஒன்னயப் பிரியப்பட்டு கலியாணம் பண்ணிக்கிட்ட மாதிரியும், என்னைத் தவிர வேறு யாரோட நினைப்பும் உனக்கு இருக்கக் கூடாது என்பது மாதிரியும், பொஸஸிவ்னஸ்னு பெரிய வார்த்தை பில்டப் பண்ணி மடக்கப் பார்க்கறியே. என்னைப் பொறுத்த வரையில், நீ விலைக்கு வாங்கப்பட்ட பொம்மை. நான் சொல்றபடிதான் ஆடணும். நீ இஷ்டப்படி ஆடக்கூடாது. சரியா? இதில் பொஸஸிவ்னஸ்ஸூம் இல்லை. ஒரு பொடலங்காயும் இல்லை.''

''என்னைப் பலவந்தப்படுத்தும் ஒவ்வொரு முயற்சியிலும் நான் உங்களிடமிருந்து விலகிப் போவதா தோணாதா?''

''புஸ்ஸூ! இந்த புத்தக வார்த்தையெல்லாம் உன் கதிரேசன்கிட்ட வெச்சுக்க. விலகிப் போறது என்பது எவ்வளவு நாள் பண்ண முடியும்? இமிர்பிடிச்சவ என்னும் பேருதான் உனக்கு மிச்சமாகும். எரிச்சல்பட ஆரம்பிப்ப. உன் தோற்றமே மாறிப் போயிடும்.''

''நான் சொல்லிக்காம ஓடிப் போயிட்டேன்னா?''

''தமிழ்நாட்டின் எந்த மூலையில் இருந்தாலும் ஆள் வெச்சுக் கூட்டிட்டு வந்திடுவேன்.''

''நான் தற்கொலை பண்ணிக் கிட்டேன்னா?''

''கள்ளக் காதலன் கதிரேசனோட தொடர்பு வெச்சுக்கிட்டா. ஒருநா ரெண்டு பேரையும் படுக்கையில் ஒண்ணா பார்த்துட்டேன். அந்த அவமானம் தாங்காம செத்துப் போயிட்டான்னு செத்ததுக்கப்புறமும் உன் பேரைச் சீரழிப்பேன். சின்னப் புள்ளையை ஏமாத்தி ஒவர்-ஹெட் டாங்கிலந்து காப்பாத்த. இது என்ன பெப்பர்மிண்ட் சங்கதியா? வாழ்க்கை! குரூரமானது... என்னை மாதிரி!''

அவள் எவ்வித மீட்சியுமின்றி இருந்த பொழுதுதான், தான் கர்ப்பமடைந்துள்ள விஷயம் தெரிய வந்தது.

(தொடரும்)

# ஐயா ஐய்யா!

பாபாவின் படுதோல்வியிலிருந்து ரஜினியை மீட்கும் என்று பரபரப்பாகப் பேசப் பட்ட கதை 'ஐயா'. ஏனோ ரஜினி பின்வாங்கி விட, அதை விஜயகாந்த் கேட்டு வியந்துபோய், ஓ.கே. சொல்லியிருக்கிறார். இறுதியில் என்ன நடந்ததோ தெரியவில்லை... இப்போது அதிர்ஷ்டம் அடித்திருப்பது சரத்குமாருக்கு! 'ஐயா' கதை அல்லோலபட்டது உண்மைதானா?


• நயன்தாரா

'ஐயா' பட பூஜையில் பிஸியாக இருந்தார் அந்தக் கதையின் பிரம்மா, இயக்குனர் ஹரி. கிடைத்த கொஞ்ச இடைவெளியில் படக்கென்று மடக்கினோம்.

“இது ரஜினி சாருக்காக உருவாக்கிய கதை இல்லை. சரத்குமாரை மனத்தில் வைத்துத்தான் தயார் செய்தேன். இந்தக் கதையை சி.ஜே. சினிமா பட நிறுவன அதிபர் ஞானவேலிடமும் சொல்லியிருந்தேன். அந்த நிறுவனம் என்றால் விஜய்காந்த் நடிப்பார் என்று டாக் வந்து விட்டது. இப்போது நான் பாடம் படித்து வளர்ந்த கவிதாலயா நிறுவனத்துக்கு, இந்தக் கதையை படமாக்குகிறேன். இங்கே நான் செல்லப்பிள்ளை. இதே நிறுவனத்தின் பின்புலத்தில் தயாரிக்கப்பட்ட 'சாமி', மெகா வெற்றிப் படமாக அமைந்து விட்டதை நான் சொல்லித் தெரிய வேண்டியதில்லை'' என்றவரிடம் ஐயாவின் கதையைக் கேட்டோம்.

“பஞ்ச பூதங்கள் பேதம் பார்ப்பதில்லை. காற்று எல்லோருக்கும் வீசுகிறது.

வெயில் எல்லோருக்காகவும் காய்கிறது. மழையும்கூட அப்படித்தான். பஞ்ச பூதங்களைப் போல பாகுபாடு பார்க்காத ஒரு பெரியவர் இருக்கிறார். அவர் காந்திஜியின் சீடர். ஆனால் காங்கிரஸ்காரர் இல்லை. அகிம்சாவாதி. தவறும், துரோகமும் செய்கிறவர்களை மன்னித்துக் கொண்டே இருக்கலாம் என்று வாழ்ந்து காட்டுகிற ஒரு கேரக்டர். இவரது வேஷ்டி, மனசு இரண்டிலுமே கறைகள் கிடையாது. குடும்பத்தை நேசிப்பது போல, தமது கிராமத்தையும் நேசிக்கிற இவர் புதிரல்ல, கதரணிந்த திறந்த புத்தகம். இவருக்கு ஒரே மகன். வெற்றிக் கோப்பைகளோடு வம்புகளையும் வாங்கி வந்துவிடும் 'வாலிபால் பிளேயர். அப்பா, மகன் கேரக்டர்களில் சரத்குமார் இரட்டை வேடம் ஏற்கிறார். தமது திறமை முழுவதையும் ஒன்று திரட்டி நடிப்பில் கொட்டுவதற்கு, சரத்குமாருக்கு மிகப்பெரிய வாய்ப்பு வந்திருக்கிறது. தேசிய விருதைக் குறிவைத்து சரத் மட்டுமல்ல, ஒட்டுமொத்த படக் குழுவுமே த்ரில்லோடு காத்திருக்கிறது'' என்று கண்களை அகல விரிக்கிறார் ஹரி.

'ஐயா' படத்தில் சரத்தின் பெரியவர் கெட்-அப், காமராஜரை நினைவூட்டுகிறது. படத்தில் அரசியல் நெடி அதிகமா? ''அரசியல் மருந்துக்கு வாசனை அடிக்கும். ஆனால் பெரிய அரசியல் விருந்தோ, அரசியல் நெடியோ இருக்காது'' என்றவர், ''பிரகாஷ்ராஜ், நெப்போலியன் இருவரையும் யதார்த்தமான மண்வாசனை மனிதர்களாகப் பயன்படுத்தியிருக்கிறேன்'' என்கிறார். மகன் சரத்குமாருக்கு ஜோடியாக, நயன்தாரா என்ற புதுமுக நாயகி களமிறங்குகிறார். இவரைத் தவிர, திருநெல்வேலியைச் சேர்ந்த ஒரு நிஜ வாலிபால் டீம் படத்தில் நடிக்கிறது. எல்லோருக்கும் கூத்துப் பட்டறையில் மூன்று மாதம் நடிப்புப் பயிற்சி கொடுத்திருக்கிறார்கள். சரத்குமார் தீவிர வாலிபால் பயிற்சி எடுத்துக்கொண்டு வந்திருக்கிறார் என்கிறார்கள்.

ஹரியிடம் பாய் சொல்லிவிட்டு வரும் முன்பு 'கோவில்', 'அருள்' படங்கள் எதிர்பார்த்த வெற்றி இலக்கை அடைய முடியாமல் போனது பற்றிக் கிளறினோம். ''சாமிக்கு பிறகு அதைப் போலவே எடுக்கக் கூடாது என்பதற்காக, மிகவும் மென்மையாக 'கோவில்' எடுத்தேன். ஹீரோ யதார்த்தமாக சைக்கிளில் கல்லூரிக்குப் போவது போல் காட்டினேன். இந்தப் படத்தை மெகா வெற்றிப் படமாக ஆக்கவில்லையே தவிர, சிம்புவின் படங்களிலேயே அதிக வசூல் கொடுத்த படம் என்ற ரெக்கார்டை ஏற்படுத்தியது.

அருளைப் பார்த்துவிட்டு, 'சாமி' போல இல்லையே என்றார்கள். 'அருள்' படத்தின் இரண்டாவது பாதியில் வில்லனை நடுரோட்டில் நாயடிப்பது போல ஹீரோ அடித்துக் கொல்வது ரசிகர்களுக்குப் பிடிக்கவில்லை. கூடவே இத்தனை வேகமாக படம் நகர வேண்டுமா என்றார்கள். திரைக்கதையில் வேகம் இருக்கலாம். அதிவேகம் ரசிகர்களுக்குப் பிடிக்காது என்பதை 'அருள்' மூலம் கற்றுக் கொண்டேன்'' என்று சொல்லும் ஹரி, 'ஐயா' படம் முழுவதையும் விருதுநகர் கதைக் களப் பின்னணியில் படம் பிடிக்கப் போகிறாராம்.



• ஹரி

- சக்கரம்

படங்கள்: ஐயா

# மனதில் உறுதி வேண்டும்!

உடல்நலம் முக்கியம். அதை விட மனநலம் முக்கியம். அதிலும் உடல்நலம் பாதிக்கப்பட்டிருக்கும் போது, மனநலம் அதிமுக்கியம்.

என்ன, விசு மேட்டர்போல இருக்கிறதா? ஆனால் விஷயம் சீரியஸானது.

சிறு உடல் உபாதைகள் வந்தாலே நமக்கு மனதும் சோர்ந்துபோய் விடுகிறது. அதிலும் இதய நோய், ரத்த அழுத்தம், சர்க்கரை நோய் போன்றவை இருப்பது தெரிந்தால்..?

ஆனால், அது போன்ற நேரத்தில்தான் நாம் மனதை உறுதியாக்கிக்கொள்ள வேண்டும்; புத்திசாலித்தனமாக நடந்து கொள்ள வேண்டும்.



எப்படி? இதோ அதற்கான சில வழிமுறைகள்...

**பயிற்சி செய்யுங்கள் :** நோய் இருப்பது உறுதியானவுடன் பலர் உடற்பயிற்சி செய்வதையே விட்டுவிடுவார்கள். அது தவறு. மருத்துவரின் ஆலோசனை பெற்று உடற்பயிற்சி செய்யலாம். நடையைவிட நல்ல உடற்பயிற்சி ஏதுமில்லை.

**தனித்திருக்காதீர்கள் :** பொதுவாகவே நோய் என்ற ஒன்று வந்துவிட்டால், பெரும்பாலானவர்கள் பிறரிடமிருந்து ஒதுங்கி வாழ்வார்கள். அதுபோல அன்றி, உங்கள் பயங்களை, நம்பிக்கையானவரிடம் கூறி கலந்தாலோசியுங்கள்.

உடல்நலம் குறித்த சிறப்பு முகாம்களிலும் கலந்துகொள்ளுங்கள். பலர் கூடும் இந்த முகாம்களிலிருந்து குழுவில் ஐக்கியமாகும் உணர்வு ஏற்படும். மேலும் தலைசிறந்த வல்லுநர்களின் கருத்துகளிலிருந்தும் பல விஷயங்களை நாம் கற்கலாம்.

**மனச்சோர்வை விரட்டுங்கள் :** சோர்வுக்கு உள்ளத்தில் இடம் தராதீர்கள். இல்லாவிட்டால் உங்கள் தோள்களில் பாரம் ஏற்றப்பட்டதுபோல் உணர்வீர்கள். இரத்த நாளங்களிலும், இதயத்திலும் படபடப்பு அதிகமாகும். இதனால் மாரடைப்பும் ஏற்படலாம்.

**நல்லதையே எண்ணுங்கள் :** 'போயும் போயும் நமக்கு இந்த நோய் வந்து விட்டதே' என்று எண்ணி கவலைப்படாமல், 'இப்போதாவது நமக்கு இது தெரிந்ததே' என்று சந்தோஷப்படுங்கள். சிறந்த முறையில் வாழ்வதற்காகக் கொடுக்கப்பட்டிருக்கும் வாய்ப்பு இது என்று கருதி செயல்படுங்கள். இவ்வித எண்ணம் வாழ்வை நீட்டிக்க உதவும்.

**நன்றாகச் சாப்பிடுங்கள் :** சமச்சீரான சத்துணவைச் சாப்பிடுங்கள். முழு தானியங்கள் பழங்கள் மற்றும் காய்கறிகள் உங்கள் உடல்நலனை இன்னும் மேம்படுத்தும்.

**- சைதை முரளி**

இருளாயிக்கு வெடவெடவென்று இருந்தது. போன இடத்திலெல்லாம் வெல்லத் தண்ணீர்தான் கொடுத்தார்கள். பசியின் ஆக்கிரமிப்பு வயிற்றை... வெடுக்... வெடுக்கென்று கிள்ளியது. பயணித்துக் மனசுதான் இல்லை.

''ஆரது... கல்லடிக் கொல்லை... கீழ எறங்குங்க...'' நடத்துனரின் கூக்குரலிலும், விசில் சத்தத்திலும் உந்தப்பட்டு இருக்கையை விட்டு எழுந்தாள் இருளாயி.

# பருந்துகளும் குஞ்சுகளும்



கொண்டிருந்த மினி பேருந்து குலுங்கிக் குலுங்கி ஓடியபோது... தலையைச் சுற்றியது.

'சொடல மாட சாமீய்... எங்கக் காவும் மச்சானும் ரூவாயக் கேட்டதும் குடுத்துடணும். நீயி தான் அவுக மனசுல பூந்து எம்மானத்தைக் கரையேத்தணும்!'

மந்திரம் மாதிரி முணுமுணுத்தன உதடுகள். கொழுந்தன் நடேசுவைப் பார்க்கப் போன போதும், இதையேதான் வேண்டினாள். ஆனால் நடேசு பத்து ரூபாய் கூட தரவில்லை. உதட்டைத்தான் பிதுக்கினான்.

''அண்ணெ மவளுக்கு கண்ணாலம் வெச்சருக்கே, எதாச்சம் குடுத்து ஒதவணு மேன்னு ஆசதான்! ஆனா ஆத்துத் தண்ணி வராம இந்தத் தடவை நடவே நடலை! கால் வயித்துக்கு கஞ்சி குடிக்கவே பிச்சை எடுக்க வேண்டியிருக்கு.. நா என்ன பண்ணட்டும்...''

நடேசு சொந்தமாய் ஆழ்குழாய்க் கிணறு வைத்திருக்கிறான். அதிலிருந்து குபுகுபு வென்று தண்ணீர் வரும். அவ்வூரிலேயே அவன் ஒருத்தன் தான் விவசாயம் பண்ணி னான். மூட்டை மூட்டையாய் நெல் விளைந்தது.

ஆனால், 'கொடுக்க வேண்டும்' என்ற

**வா**சலில் தார்ப்பாயில் உளுந்தும், பயறும் காய்ந்து கொண்டிருந்தன. பக்கத்தில் படுத்திருந்த கறுப்பு நாயானது இருளாயியைக் கண்டதும் குரைத்தது.

''எலே.. சிம்மி.... சும்மா கெட!''

அதட்டியபடியே வெளியே வந்தாள் பொன்னாத்தா. இரட்டை நாடி உடம்பில் கங்குடிச் சேலை. மூக்கிலும், காதுகளிலும் நத்தை நத்தையாய் தங்கம்! வந்திருப்பது இருளாயி என்று தெரிந்ததும் முகத்தை நொடித்தாள்.

''இப்பத்தான்... அக்கச்சி வூடு

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை

மகேஸ்வரன்

தெரிஞ்சதாக்கும்!"

"நல்லாருக்கியாக்கா...?"

கனிவாய்க் கேட்டாள். வாங்கி வந்திருந்த தேங்காய்ப்பால் முறுக்கை பையோடு நீட்டினாள்.

"மச்சான் எங்கக்கா?"

"பஞ்சாயத்து போர்டுக்குப் போயிருக்கு! நீ உள்ளே வா!"

இருளாயியின் கண்கள் பொன்னாத்தாவின் வீடு முழுக்க அலை பாய்ந்தது. திண்ணை, கூடம் என்று ஒரு இடம் விடாமல் சுழல்கிற சீலிங் ஃபேன்கள். பெரிய கலர் டி.வி., விலையுயர்ந்த சோபாக்கள், டெலிபோன், கூடத்தின் மூலையில் ஃப்ரிஜ் என்று ஆடம்பர வசதிகள் அத்தனையும் இருந்தன.

மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தாள்.

"எம் மவ பவுனுக்கு கண்ணாலம் வெச்சிருக்கேன்க்கா!"

"பத்திரிகை வெய்க்க வந்தியாக்கும்?"

"ம்..."

"பவுன மணப்பாறைக்கு அந்தண்ட பஞ்சு மில்லுல இல்லெ கொண்டு போயி விட்டுருந்தே... எப்போ கூட்டியாந்தே...?"

"இப்பத்தான்..."

"பஞ்சு மில்லு மொதலாளி எவ்னோ ரூவா தந்தான்?"

"அஞ்சாறு வருஷமா வேலை பார்த்துருக்கால்லெ.. சொளையா முப்பதாயிரம் குடுத்தான்! அத வெச்சு தான் கண்ணாலத்தையே நடத்தணும்! மாப்ள பால் வேவாரம் செய்றாரு! செவப்பா ஒல்லியா இருந்தாலும் நல்ல லட்சணம்! கட்டித் தங்கமா கொணம்! அதான் முடிச்சுப்புட்டேன். தாலி கட்டற சீலயில இருந்து, கண்ணாலச் செலவு முழுக்க அவுகளது!"

"புழுக்க வயித்துல பொறந்தாலும் புண்ணியம் பண்ணிருக்கா... உம்மக..."

"ஏழு சவரன், கட்டிலு, மெத்த, பீரோன்னு எல்லாச் சாமானும் வாங்கித்

தரணுமாம்! ஏதோ தெகிரியத்துல தலை யாட்டிப்புட்டேன்! நா ஒன்னைய நம்பித் தான்க்கா வந்துருக்கேன். பதினைஞ்சோ இருபதோ குடுக்கா, அடுத்த தைக்குள்ளே கடனைத் திருப்பிக் குடுத்துடுறேன்."

கெஞ்சலாய்ப் பார்த்தாள் இருளாயி.

"இருபதாயிரமா? இங்கயே நிலமை சரியில்லை. தோப்பையும், தொரவையும் அடகு வெச்சுருக்கோம்" என்றாள் எங்கேயோ பார்த்தபடி.

"பத்தாச்சும் குடுக்கா"

"வெங்கலத்துல தவலையும் கொவளை யும் எடுத்துத் தர்றேன்! எதோ என்னால முடிஞ்சது... ஆமா, ஒங்கொழுந்தனைப் போயி கேக்கறதுக்கென்ன?"

"இல்லேனுட்டாக!"

"ஆன கட்டிப் போரடிக்கற ராசாகிட் டயே. எதுவும் இல்லாதப்ப, ஆடு மேய்க் கறவன்கிட்ட என்ன இருக்கும்? உம் மச்சான் நெலமயும் அதான்!"

கறாராய்ப் பேசினாள் பொன்னாத்தா.

பாக்கு, வெற்றிலையோடு பத்திரிகையை வைத்துவிட்டு, மனசு நொறுங்க எழுந்தாள் இருளாயி.

"இங்கறதுக்கு என்ன ஆயா வாங்கியாந்தே?"

ஏழாங்கிளாஸ் படிக்கிற செங்கனியும், ஆறாங்கிளாஸ் படிக்கிற அம்பிகையும் இருளாயியின் கையை ஆசையாய்ப்பார்த் தார்கள். வெறும் துணிப்பையைக் கோப மாய்க் கீழே வீசினாள் இருளாயி.

"சித்தப்பும், பெரியம்மாவும் கையை விரிச்சுடுச்சிங்களா ஆயா?" பவுனு கேட் டாள்.

"ம்"

தொண்டையை அடைத்தது. எந்தக் கவலையுமின்றி, கயிற்றுக்கட்டிலில் குடி போதையோடு படுத்திருக்கும் புருஷன் காரன் மீது ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

"யோவ்... ஆம்பளையாய்யா நீயி? மூக்குக்குக் கீழே இருக்கறதை மழிச்சுப் புடு. ஆமா! மவளுக்கு கண்ணாலத்தை வெச்சுப் புட்டு, பொட்டச்சி கெடந்து அல்லாடு றனே... நீ"

மூக்கை உறிஞ்சினாள். சிந்தி வீசினாள்.

இருளாயியின் மனம் முழுவதும் பயம் கவ்வியது.

மறுநாள்...

இருளாயி படுக்கையிலேயே கிடந்தாள்.

செங்கனியும், அம்பிகையும் பள்ளிக் கூடத்திற்குப் போய் விட்டனர். பவுனு

> "கமலா... நான் 'வரதட்சணை' வாங்கினேன்தான். அதுக்காக உங்கம்மா ஆரத்தி சுத்தும்போது, 'டௌரி கல்யாணம் வைபோகமே'ன்னு பாடறது அவ்வளவு நல்லாயில்லே..."
>
> \- ஆர். சுந்தரராஜன்

காத்தையே இல்லாமல்... ஆற்றுக்கு குளிக்கப் போய்விட்டாள்! ரங்கன் எப்பவும் போல சாராயம் குடிக்க கருவேலங்காட்டுக்குப் போய்விட்டான்!

"ஏ புள்ள இருளாயி..."

மாசாணி, குடிசைக்கே தேடி வந்து விட்டாள். இருளாயியின் வயதுதான் அவளுக்கும்.

அவளது வயதை ஒத்தவள். மாசாணியின் புருஷனும், பிள்ளையும் கேரளாவில் கூலி வேலை செய்கிறார்கள்.

"பணத்துக்கு அலையறியாமே? கெடைக் காம மனசை உட்டுட்டியாமே? போடி இவளே! வழியா இல்லே? எங்கிட்டே கேட்டிருக்கப்புடாது?"

இருளாயி மினுக்கென்று நிமிர்ந்தாள்.

"ஒனக்குப் பணம்தானே வேணும்?"

"ஆமா..."

"நா வாங்கித் தர்றேன்! டவுனுலே சாயத் தொழிற்சாலையில வேலக்கி ஆளு எடுக் கறாகளாம்! நம்ம கவுரியோட ரெண்டு மவளுகளையும் அங்கே சேர்த்தாச்சு! தலைக்கு பத்தாயிரம் ரூபா தர்றாரு மொதலாளி! மூணு வருசம் வேலை பார்த்துட்டு வந்துடலாம்! மேல இருக்கறதா இருந்தாலும் இருக்கலாம்! ஓம்மவளுக செங்கனியையும் அம்பிகையையும் அங்கே கூட்டிப் போய் விட்டிட்டு, கையோட பணத்தை வாங்கியாந் துடலாம்..'

மாசாணி சொல்ல, கரீரென்றிருந்தது.

"படிக்கற புள்ளைகளைப் போயி..."

"படிச்சு கிழிச்சு கலக்டராகப் போகுது களா? கழுதக் குட்டிங்களாப் பொறந்தா, குட்டிச்சுவரண்ட போயி நிக்கத்தான் வேணும்! பவுனு கண்ணாலத்தைக் கெடுத் துப் புடாத! கருக்கல்ல... அதுங்களையும் கிளப்பிக்கிட்டுத் தயாரா இரு! நா கூட்டிப் போறேன்!"

மாசாணி போய்விட்டாள்.

இருளாயி யோசிக்கத் தொடங்கினாள்

"அறைஞ்சேன்னா மொகர பேந் துடும்! ஒக்கா பவுனு அஞ்சு வருஷத்துக்கு மேல பஞ்சமில்லுல போயி வேல பாக்கல? ஒரேடியா சிலுப்புறீங்களே... ரெண்டு பேரும் சல்தியா கௌம்புங்க! மூணு வருசமும் ஓடற



ஓட்டத்துலபோயிடும்! அதுக்குள்ளே எதாச்சும் பணம் கெடைச்சா, கடனை அடைச்சுப் புட்டு கூட்டியாந்துடுறேன்!"

இருளாயி இருள்கிழியக் கத்தினாள்.

தகரப் பெட்டிக்குள் செங்கனி, அம்பிகை இருவரது உடைகளையும் அடுக்கினாள். இருவரும் தேம்பியபடியே. தலையை வாரி, ஜடை பின்னிக் கொண்டார்கள். விபூதி பூசிக் கொண்டார்கள்.

கிராமத்தில் எட்டாவது வரை இருக்கும் நடுநிலைப்பள்ளியிலே நன்றாகப் படிக்கும் மாணவிகள் அவர்கள் இருவரும்தான்! நன்றாகப் படித்து டீச்சராக... நர்ஸாக... மாறவேண்டும் என்று கண்ணுக்குள் ஆயிரம் கனவுகள்.

எல்லாமே வீணாகப் போகிறதே என்று எண்ணும்போது அழுகையாக வந்தது. அடம் பண்ணினால் 'ஆயா அடிப்பாளே' என்ற பயமும் வந்தது. இருண்ட முகத்தோடு இருவரும் கிளம்பினார்கள்.

பொழுது பொல்பொலவென்று விடிய ஆரம்பித்திருந்தது.

"அடியேய் பவுனு! சாணத்தைத் தெளிச்சு வாசலைக் கூட்டி கோலம் போடு! நா இதுங்களைக் கொண்டு போயி உட்டுட்டு சாயங் காலத்துக்குள்ளே திரும்பிடுறேன்...."

பவுனுவின் முதுகில் தட்டி எழுப்பினாள்.

மண்ணெண்ணெய் விளக்கை ஊதி அணைத்தாள்.

வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தாள் பவுனு.

"எங்க ஆயா... கௌம்பிட்டே?"

புரியாமல் பார்த்தாள்.

"இதுங்களை டவுனுக்கு கூட்டிப் போறேன்..."

"எதுக்கு?"

"ஒங்கண்ணாலத்துக்கு பணம் வேணுமே! சாயத் தொழிற்சாலை மொதலாளிகிட்டே விட்டுட்டு, தலைக்கு பத்தாயிரத்தோட வர்றேன்!"

சாட்டையால் விளாசியதைப் போல துடித்துப் போய் நிமிர்ந்தாள் பவுனு. அஞ்சாறு வருஷத்துக்கு முன்பு, 'நா படிக்கறேன் ஆயா... படிக்கறேன் ஆயா! என்னைய விட்ரு! எங்கேயும் கூட்டிப் போவாத!' என்று அழுததும் புரண்டதும் கண்களில் நிழலாடியது.

தன் படிப்பு பாழானது. பஞ்சமில்லில் சேர்ந்தது... அங்கே அடிமையைப் போல உழைத்தது... அரை வயிற்றுக்கு மட்டும் சாப்பாடு கிடைத்தது... அந்த சாப்பாட்டிலும் புழுக்கள் நெளிந்தது... காற்றோட்டமே இல்லாத அறைக்குள் நூற்றோடு ஒன்றாய் அடைந்து கிடந்தது... சுதந்திரக்காற்றை சுவாசிக்கவே மாட்டோமா என்று ஏங்கியது, எல்லாம் நினைவில் வந்தன.

"அறிவிருக்கா ஆயா ஒனக்கு? இதுங்களாச்சும் நெறையப் படிக்கணும்... நல்ல வேலைக்குப் போவணும்... சொகமா வாழணும்னு கனா கண்டுகிட்டிருக்கேன் நா! அதுலயும் மண்ணள்ளிப் போடப் போறியா? அந்த நரகத்துல நா கெடந்தது போதாதா? இதுகளயும் தள்ளணுமா?"

"பவுனு... எல்லாம் ஒனக்காக! ஒன்னோட கண்ணாலத்துக்காக!"

"வேணாம்! பாழாப்போன கண்ணாலம் எனக்கு வேணாம்! கண்ணாலத்தால என்ன சொகம் கெடைச்சது ஒனக்கு? மூணு புள்ளை பெத்து வெச்சுகிட்டு அல்லாடுறே! என்னிக்காச்சும் மனசு நெறைஞ்சு சிரிக்கிறியா நீ? குடிகாரனுக்குக் கழுத்தை நீட்டி தெனமும் அழுது செத்துக்கிட்டுதானே கெடக்கே? இதுகள சாயத்தொழிற்சாலை மொதலாளிகிட்ட அடவு வெச்சு, என்னோட கண்ணாலத்தை நடத்திடறேன்னு வெய்! அதுக்கப்புறம் பிரசவம் அது இதுன்னு வந்து நிப்பேனே... அப்போ யாரை அடவு வெய்ப்பே? ஒன்னையா? இல்லே உன் குடிகாரப் புருசனையா? என்னோட கண்ணாலம் நிக்கறதைப் பத்தி எனக்குக் கவலை இல்ல! ரெண்டு பேரும் ஒழைப்போம்! ஒனக்குக் கெடைக்காத, எனக்குக் கெடைக்காத, படிப்பெல்லாம் இதுகளுக்குக் கொடுப்போம். இதுங்களாச்சும் உசரத்துக்குப் போவட்டும்!"

ஆத்திரமும், ஆவேசமுமாக கணீர் கணீரென்று பேசினாள் பவுனு.

சுள்ளென்று வலித்தது இருளாயிக்கு!

மவுனமாய்க் கையிலிருந்த தகரப் பெட்டியைக் கீழே வீசினாள்.

வாசல் தெளித்து கோலம் போடத் தொடங்கினாள்.

விடியல் புதிதாய் தெரிந்தது. மனசும் தெளிந்து போயிருந்தது. ○

# திருவலிதாயம்!

திங்கட்கிழமை காலை எட்டரை மணிக்கு, சுவாமி தரிசனத்துக்கு இரு வரிசைகளாக சந்நிதியில் நிற்கும் கூட்டத்தைப் பார்த்தால் வியப்பாக இருக்கிறது. அதிலும் எண்பது சதவிகிதம் பேர் இளைய சமுதாயத்தினர்!

"காலையில வேலைக்குப் போறதுக்கு முன்னால, வந்து தொழுதுட்டுத்தான் போவேன்!'' என்கிறார் இளைஞர் குணசேகரன்.

நம்மை வியக்க வைத்த இந்தக் கோயில், பாடியிலுள்ள ஜகதாம்பிகை உடனுறை திருவல்லீசுவர சுவாமி கோயில். பாடல் பெற்ற திருத்தலம். மரத்தடிக் கோயிலாகத் தொடங்கி, மரக் கோயிலாகி, சாதாரண ஓட்டுக் கோயிலாக மாறி, இராஜ ராஜ சோழன் காலத்தில் கற்கோயிலான பழம் பெரும் கோயில் இது. தொண்டை நாட்டு முப்பத்திரண்டு சிவத் தலங்களில் இதுவும் ஒன்று.

"சூரியன், சந்திரன், இந்திரன், குரு, அனுமன், ஸ்ரீராமர் ஆகியோர் இங்கே பூஜை செய்திருக்கிறார்கள்'' என்கிறார் சுப்பிரமணிய சிவாச்சாரியார். "நான் பத்து வயதிலிருந்தே இந்தக் கோயிலில் பூஜை செய்து கொண்டிருந்தேன். 83 ஆம் வருடத்திலிருந்து என் மகன் ஞானசம்பந்தன் பூஜை செய்து வருகிறான்!'' என்கிறார்.

"மேனகையோட சாபத்தால் கருங்குருவி - அதாவது வலியன் குருவியாக - ஆனார் பரத்வாஜர். சாப விமோசனத்துக்காக இங்கே வந்து பூஜை செய்தார். அதனால் இந்த இடத்துக்கு திருவலிதாயம் என்று பெயர் வந்தது. பகவான் திருவலிதாய நாதர், அம்பாள் திருப்பெயர் தாயம்மை'' என்கிறார் ஞானசம்பந்த சிவாச்சாரியார்.

திருஞானசம்பந்தர், அருணகிரிநாதர், ராமலிங்க சுவாமிகள் ஆகியோரால் பாடப்பெற்ற திருக்கோயில் இது. பிராகாரம் முழுக்க 'இடரினும் தளரினும்', 'மந்திரமாவது நீறு...', 'பண்ணிடைத் தமிழொப்பாய், பழத்தினிற் சுவையொப்பாய்' முதலிய சம்பந்தர் தேவாரப் பாடல்கள் அழகாக அலங்கரிக்கின்றன. எல்லாம் திருநாவுக்கரசர் உழவாரப்பணி மன்ற உபயம்.

மேற்கு நோக்கி குரு பகவான் சந்நிதி, "பிரகஸ்பதி குரு பூஜை செய்த இடம். திருச்செந்தூர், தென்குடித்திட்டை, ஆலங்குடி தலங்களுக்குச் சமமானது!'' என்கிறார் சிவாச்சாரியார்.

தட்சிணாமூர்த்தி சந்நிதியில் வியாழக்கிழமைகளில் கூட்டம் அதிகம் இருக்குமாம்.

'திருவலிதாய மதில் உறைவோனே' என்று அருணகிரிநாதர்



● ரிஷப வாகனத்தில்...

பாடியிருக்கிறார். இங்குள்ள முருகன் சந்நிதியிலும் நல்ல கூட்டம்.

"நான் தொடர்ந்து மூணு வருஷமா வந்திட்டிருக்கேன்" என்கிறார் பெரம்பூரைச் சேர்ந்த சம்பத்.

"இங்க வந்துட்டுத்தான் வேலைக்கே போவேன்" என்கிறார் முத்தழகு!

பாதிரி மரமும், சரக்கொன்றையும் தல விருட்சங்கள். "இரண்டுக்கும் நடுவேதான் பரத்வாஜர் பூஜை செய்ததாகச் சொல்லுவார்கள்! திருக்குளம், பாரத்வாஜ தீர்த்தம். எனக்கு அருள் பாலித்தது போல், இனி வருங்காலத்தில் இங்கே வருகிறவர்களுக்கும் அருள் பாலிக்க வேண்டும் என்று பரத்வாஜர் பகவானிடம் வேண்டிக் கொண்டதாக ஐதீகம்!" என்கிறார் சிவாச்சாரியார்.

"திருவலிதாயத் திருக்கோயிலுக்கு, திருமயிலை, திருவான்மியூர், திருவேற்காடு, திருவிற்கோலம், திருஇலம்பையங் கோட்டூர், திருவூறல், திருவாலங்காடு, திருவெண்பாக்கம், திருப்பாச்சூர், திருமுல்லைவாயில், திருவொற்றியூர் முதலிய திருக்கோயில்கள் மாலை சூட்டியது போல அமைந்திருக்கின்றன" என்கிறார் சிவாச்சாரியார்.

"சார் நாங்க திருநின்றவூர்" என்றனர் கோயிலுக்கு வந்திருந்த இளைஞர்கள் யுவராஜும், ஹரியும். "எல்லா திங்கட்கிழமையும் காலைல இங்க வந்து தரிசனம் பண்ணிட்டா, ஒரு வாரத்துக்கு ஆக்ஸிஜன் ஏத்திக்கிட்ட மாதிரி இருக்கும்... திருநின்றவூருக்கும் வாங்க சார். இருதயலீசுவரர் - மரகதாம்பிகை அருள் பாலிக்கிறாங்க. இதய நோய் உள்ளவர்கள் இங்கே வந்து வேண்டிக் கொள்வார்கள். அப்புறம் பக்தவச்சலப் பெருமாள் - என்னைப் பெற்ற தாயார். தாயாருக்கு இப்படி ஓர் அழகான பெயர், உலகத்துல வேறெங்காவது இருக்கா சார்...? அப்படியே புழலில் திருமூலநாதர்... மறந்துடாதீங்க..." சொல்லிக்கொண்டே போனார்கள் இளைஞர்கள்.

ஞானசம்பந்த சிவாச்சாரியார் சொன்ன இன்னொரு தகவல் :

"பிரம்மாவோட பெண்கள் கமலை, வல்லி இருவரும் விநாயகரைத் திருமணம் புரிந்துகொண்ட தலம் இது. இந்த விநாயகர் சன்னிதியில் மாலை சார்த்தி வேண்டிக் கொண்டால், சீக்கிரம் திருமணம் நடக்கும்!" (அப்போ விநாயகர் பிரம்மச்சாரி இல்லியா?)

கோயிலுக்குள் நுழையு முன்பு, கொடி மரத்துக்குப் பக்கத்தில் உள்ள போர்டு நம் கவனத்தைக் கவர்ந்தது: 'நம் கோயிலில் உள்ள பசுக்களுக்கும், புறாக்களுக்கும் தீவனம் குறைவாக இருப்பதால், நம்மால் இயன்ற வகையில் தவிட்டோ, புண்ணாக்கோ, பொட்டு வகைகளோ, கம்பு, சோளம், வைக்கோல், கேழ்வரகோ அளித்து, இறை அன்பைப் பெறுவோம்.'

- சாருகேசி

● சென்னையில் நடந்த யாகமொன்றில் கலந்து கொண்ட 'வீராசாமி'யின் பக்திப் பழ கெட்டப், ராம பக்தர்களை வெகுவாகக் கவர்ந்துவிட்டது போல... அவரை தங்கள் கட்சிக்கு இழுக்க ஏற்பாடு செய்கிறார்களாம்!

● "மத்தியிலும் மாநிலத்திலும் ஒரே ஆட்சி வந்துவிடும்" என்று பா.ம.க செயற்குழுக் கூட்டம் முடிந்ததும் டாக்டர் அய்யா கூறியது யாருக்காக, எதற்காகக் கொடுக்கப்பட்ட சிக்னல் என்பது அக்கட்சியினருக்கே புரியாத புதிராக இருக்கிறதாம்.

● நடைபயண நாயகரின் திருமங்கலப் பேச்சுதான் அவர் மீது பொடா பாயக் காரணமானது. இப்போது திருமங்கலம் நகரசபை இடைத்தேர்தல் நடந்திருக்கிறது. இதில் போட்டியிட்டு வெற்றி பெற்றே ஆக வேண்டும் என்று கங்கணம் கட்டி காய் நகர்த்தி வருகிறார்கள் ம.தி.மு.க.வினர்.

● சத்தியமூர்த்தி பவன் அடுத்த குஸ்திக்குத் தயாராகி வருகிறதாம். இளையவருக்கு அமைச்சர் பதவி கிட்டிவிட்டால், அடுத்த தலைமை, மலைப் பிரதேசத்தைச் சேர்ந்த இருவருள் ஒருவருக்குத்தான் நிச்சயம் கிடைக்கும் என்று விஷயம் லீக் ஆக, வழக்கம்போல் கொந்தளித்துள்ளனர் தொண்டர்கள். அந்த இருவரில் ஒருவர் டெல்லிக்கு நெருக்கமானவர்; மற்றொருவர் தமிழகத் தலைமைக்கு நெருக்கமானவர் என்பது குழப்பத் தருந்த தகவல்!

● 'மக்கள் கூட்டணி'யாக இயங்கி வந்த அணி, வரும் தேர்தலிலும் களம் காணுமாம். ஆனால் அதில் முக்கிய தலித் கட்சி நிச்சயம் இடம் பெறாதாம். காரணம், தம்பியால் அண்ணன் சமீபகாலமாக கண்டு கொள்ளப்படாததுதானாம். எல்லாம் புது சொந்தம் வந்ததால்தான்' என்று கோபம் கொப்பளிக்கப் பேசுகிறார்களாம் அண்ணன் கட்சியினர்.

● தமிழகக் கட்சிகள் ஏதோ தேர்தல் ஜுரம் வந்துவிட்டதைப் போல ஆளுக்கொரு பிரச்னையைக் கையிலெடுத்துக் கொண்டு போராட, விழித்துக் கொண்ட தோழர்கள், தூங்கிக் கொண்டிருக்கும் பிரச்னையான உள்ளாட்சித் தேர்தல் பிரச்னையைக் கையிலெடுத்தது, சக தோழர்களை சோர்வடையச் செய்து விட்டதாம். இருந்தாலும் வரவேற்பு ஓரளவிற்கு

● பேச்சே மூச்சு...



● அண்ணன்...



ராமதாஸ்



* இளையவர்



...தம்பி *



* வீராசாமி

இருக்கவே, தொடர்ந்து போராட முடிவு செய்துள்ளார்களாம்.

# கொடுத்த சிக்னல்!

● சேது சமுத்திர போஸ்டர் சர்ச்சை அடங்குவதற்குள், தி.மு.க. கூட்டணிக்கு அடுத்த தலைவலி வந்துவிட்டதாம். நரசிம்மராவ் அரசு தனது மெஜாரிட்டியை நிரூபித்த விதம் குறித்து 'உடன்பிறப்புகள்' பேச்சோடு பேச்சாக ஞாபகப்படுத்தி வைக்க, அது கதர்ச் சட்டைகள் மத்தியில் புகைச்சலை ஏற்படுத்தி, 'எங்களுக்கும் பழசெல்லாம் ஞாபகமிருக்கு' என ஆவேசப்பட்டுள்ளார்களாம்!

● காரைக்குடியின் வாரிசுக்கு டெல்லியில் காலியாக இருக்கும் 'இளமையான' பதவி கேட்கப்பட்டது தெரிந்ததே. இதுவரை எவ்வித சிக்னலும் கிடைக்காததுதான் பேரியக்கத்துடன் பேரவை இணைவது தள்ளிப் போவதற்குக் காரணமாம்.

- கலை



* அய்யா

# 9. விஷ்ணு சித்தர்

'ஒளிமாடங்கள் சூழ்ந்தழகாய கச்சி' என வர்ணிக்கப்பட்ட காஞ்சி, இரவின் அந்த இரண்டாவது ஜாமத்திலும், உயர்ந்த மாடங்களிலும், மாளிகைகளிலும், கோபுரங்களிலும் எரிந்த தீபங்களாலும், பந்தங்களாலும் ஜாஜ்வல்யமாக ஒளிர்ந்து கொண்டிருந்தது. சாதாரண மக்கள் நடமாட்டம் குறைந்திருந்தாலும், மல்லைத் துறையிலிறங்கி, ஓயாது வந்து கொண்டிருந்த வணிகர் கூட்டம், வடக்கு வாயில் வழியே ரதங்களிலும், பொதி வண்டிகளிலும் தொடர்ந்து வந்து கொண்டேயிருந்தது.

யவன வணிகர்களையும், கடாரத்து வணிகர்களையும் அடுத்து, ராட்சதர்களைப் போலிருந்த கறுப்பு அடிமைகள் சூழ்ந்து வர, சீனத்துப் பொதி வண்டிகள் வந்தன. மஞ்சள் முகங்களுடனும், தட்டையான மூக்குகளுடனும் ரதங்களில் அமர்ந்து வந்த சீனத்து வணிகர்கள், கோட்டையின் வாயிலில் நின்ற ராஷ்டிர கூடர்களுக்கு வெகு தாராளமாக பொற்காசுகளைக் கொண்ட முடிப்புகளை அளித்துக் கொண்டே வந்தனர்.

வடக்கு வாயிலின் வழியே உள்ளே நுழைந்த ரதங்கள் ராஜ வீதியில் நுழைந்து, தெற்கு நோக்கி வரிசையாகச் சென்றன. அந்த வரிசையிலிருந்து பிரிந்த ரதமொன்று வணிகர் வீதியை அடுத்து குறுகிய தெருவொன்றில் திரும்பி, நகரப் பிரமுகர்கள் இருக்கும் வீதியை அடைந்து, மரம் செடி கொடிகள் அடர்ந்த தோட்டப் பகுதிகள் வழியே, பெரும் மாளிகையொன்றின் பின்புறத்தை அடைந்து நின்றது.

ரதத்திலிருந்து குதித்து இறங்கிய வணிகனும், ரதத்தை ஓட்டி வந்த அடிமையும், புரவிகளைப் பிரித்து மரமொன்றில் பிணைத்து விட்டு, நீண்ட அங்கிகளையும், சதுரத் தலைப்பாகைகளையும் களைந்தனர். சற்றுப் பருத்த உடலுடனும் வலுவான கரங்களுடனும், உருண்ட பெரும் விழிகளுமாக நின்ற வணிகன், அடிமை வேஷத்தைக் கலைத்து முகத்தைத் துடைத்துக் கொண்டிருந்தவனைப் பார்த்து, "பராந்தகா, இது நம் சோழ வணிகர் இல்லம். நாம் சந்திக்க வேண்டியவர் இங்குதான் இருக்கிறார், வா" என்றபடி மாளிகை



யின் பின்புறத்து வாயிலை நோக்கி நடந்தான்.

கதவை அடைந்து மும்முறை தட்டிய வணிகன், சற்று இடைவெளி கொடுத்து மீண்டும் மும்முறை தட்டினான். கதவைத் திறந்தவன் அசல் பிரும்ம ராட்சதனாகவே தெரிந்தான். அவனது அதீத உயரமும், கறுத்துப் பருத்துக் கிடந்த தேகமும், முரட்டுக் குழல்களும் பார்வைக்கு அச்சத்தை ஏற்படுத்தின. மொச்சை மொச்சையான பற்களைக் காட்டி வணிகனைப் பார்த்துச் சிரித்தவன், பின்னால் நின்ற பராந்தகனைப் பார்த்ததும் சட்டென்று தன் பல்வரிசையை மூடினான்.

"பகதத்தா, யாரிவன்? புதிதாக எவரையும் இங்கு அழைத்து வரலாகாது என்று தெரியாதா உனக்கு?" என்றான் ராட்சகன்.

# விஷ்வக்ஸேனன்

பகதத்தனின் பெரு விழிகள் அவனை நோக்கி உருண்டன. "முட்டாளே, இவர் தாம் நம் பராந்தகர், படைத்தலைவர் அனுப்பிய ஓலை கிடைக்கவில்லையா? விலகு அப்பால்" என்றான் கடுமையாக.

அந்த ராட்சதனின் கறுத்த முகத்தில் அடுத்த கணம் வியப்பும் மதிப்பும் வேகமாகப் பரவின. "வர வேண்டும் பராந்தகரே, வரவேண்டும். மாலையிலிருந்தே தலைவர் தங்களைத்தான் எதிர்பார்த்துக் காத்திருக்கிறார். இன்னாரென்று அறியாமல் நான் பேசி விட்டேன். மன்னிக்க வேண்டும்" என்றான் தலை



வணங்கி.

அவனை அலட்சியமாக ஒதுக்கிய பகதத்தன், பராந்தகனை அழைத்துக் கொண்டு உள்ளே நுழைந்தான். முதலில் தென்பட்ட நீண்ட கூடத்தில் பெரும் பேழைகள் பல அடுக்கப்பட்டிருந்தன. அவற்றின் மேலும் கீழும், ஆரங்களும், முத்துச் சரங்களும், வேறு பல ஆபரணங்களும், கற்களும் சிதறிக் கிடந்தன. மறு முனையிலிருந்த படிகளில் ஏறி மேல் மாடத்தின் நீண்ட தாழ்வரையைக் கடந்து, பகதத்தனுடன் வந்த பராந்தகன் அங்கிருந்த பெரும் அறையை அடைந்ததும் பிரமித்து நின்றான். அறையின் சுவர்களிலும், தூண்களிலும் பொன் தகடுகளால் இழைக்கப்பட்ட சிலைகளும் பதுமைகளும் மின்னின. தரையிலிருந்த ரத்தினக் கம்பளத்தில் அரபு நாட்டுக் கலைத்திறன் விழிகளைக் கவர்ந்தன. மேலிருந்து தொங்கிய யவன நாட்டுச் சர விளக்குகள் அந்த அறையை தேவ லோகமாகவே அடித்தன.

அறையின் மற்றொரு மூலையை நோக்கிய பராந்தகனின் விழிகள் வியப்பைக் கொட்டின. அறையிலிருந்த பெரும் அலங்கார மஞ்சங்களையும், விரிப்புகளையும் விடுத்து, வெறும் தரையில், காவி உடைகளுடன் சலனமற்ற கூர் விழிகளால் உற்றுப் பார்த்தபடி அமர்ந்திருந்தார் ஒரு மனிதர். பளீரென்ற திருமண் துலங்க, எல்லையற்ற சாந்தம் விழிகளில் தவழ, பார்வைக்கு மெல்லிய, ஆனால் வைரம் பாய்ந்த தேகத்துடன் அமர்ந்திருந்த அந்த மனிதரைக் கண்டதும், பராந்தகன் மனத்தில் அவரை இதற்கு முன்பாக எங்கோ பார்த்திருப்பதான நினைவு எழுந்தது.

பராந்தகனின் பார்வையைக் கவனித்தவர் முறுவலித்தார். "உள்ளே வா, பராந்தகா, படைத்தலைவர் கூறியனுப்பிய ரத்தின வணிகன் குணவர்மன் நான் தான்" என்றார்.

பராந்தகன் அவரை நெருங்கி வணங்கியபடி, முத்திரை மோதிரத்தை கச்சையிலிருந்து எடுக்க முயன்றான். குணவர்மரின் கரம் உயர்ந்து தடுத்தது. "முத்திரை மோதிரம் அவசியமில்லை பராந்தகா. நீ யாரென்பதை நான் நன்றாகவே அறிவேன். உன்னை மட்டுமல்ல, உன் தந்தையையும் அறிவேன்."

# அருள்வாக்கு

**எல்லா தானங்களிலும் அன்ன தானம் விசேஷம். பகவானும் கீதையில், எவன் தனக்காக மட்டும் ஆஹாரம் தேடிச் சாப்பிட்டுக் கொள்கிறானோ, அவனுடைய பாபத்தையும் முழுக்க அவனேதான் அனுபவித்தாக வேண்டும்; வேறு யாரும் அதில் பங்கு எடுத்துக் கொள்ள மாட்டார்கள் என்கிறார். பிறனுக்குப் போடாமல், தான் மட்டுமே தின்கிறவன், சாதம் சாப்பிடவில்லை, பாபத்தையே புஜிக்கிறான் என்கிற மாதிரிச் சொல்கிறார்.**

***அன்னதானத்துக்கு என்ன விசேஷம்***

"ஆம் குணவர்மரே, என் தந்தையுடன் தங்களை குடந்தையின் ஆலயத்திலும், காவிரித்துறையிலும் சந்தித்திருப்பதான நினைவிருக்கிறது எனக்கு. என் யூகம் சரியானால், குணவர்மர் என்பதும் தங்கள் பெயரல்ல" என்றான் பராந்தகன்.

அவரது விழிகள் ஜொலித்தன. "ஆம் பராந்தகா. நீ கூறுவது உண்மைதான். இந்த இடத்தின் சூழ்நிலை என்னை ரத்தின வணிகனாக காட்டிக் கொள்ளத்தான். நீ என்னிடம் என்றோ வந்து சேர்ந்திருக்க வேண்டியவன். உன் தந்தை கருணாகரர் தடுத்தார். ஆனால் இப்போது நீ... வைகுந்தன் திருவுள்ளம் இப்படித்தான் என்றால், அதை மாற்ற நாம் யார்?" என்றவர் எழுந்து, "பகதத்தா, ஏற்கெனவே தாமதமாகி விட்டது. நாம் புறப்பட வேண்டும். உன் நண்பனுக்கு மீதி விவரங்களைச் சொல். உங்கள் உடைகளையும் மாற்றிக் கொள்ளுங்கள். இதோ வருகிறேன்" என்றவர் திரும்பி, ஏதோ காற்றில் மிதப்பவரைப் போல வேகமாக உள்ளே நடந்தார்.

அவரது வேகம் பராந்தகனை வியக்க வைத்தது. "பராந்தகா, இவரது வேகத்தைக் கண்டு வியக்காதே. நம் படைத் தலைவரின் வலது கரமாக போர்களில் பங்கேற்றவர் இவர். மன்னர் மறைந்தபின் ஆழ்வாரின் சீடரிடம் தீட்சை பெற்றுக் கொண்டார்" என்றான் பகதத்தன்.



என்றால், இதிலேதான் ஒருத்தரைப் பூர்ணமாகத் திருப்திப்படுத்த முடியும். பணம், காசு, வஸ்த்ரம், நகை, பூமி, வீடு இந்த மாதிரியானவற்றை எவ்வளவு கொடுத்தாலும் வாங்கிக் கொள்கிறவன், அதற்கு மேல் தந்தாலும் 'வேண்டாம்' என்று சொல்ல மாட்டான். அன்னம் போடுகிறபோதுதான் ஒருத்தன் என்னதான் முட்ட முட்டச் சாப்பிட்டாலும், ஓர் அளவுக்குமேல் சாப்பிட முடியாது. 'த்ருப்தோஸ்மி; போதும்' என்று சொல்கிறான். ஓர் அளவுக்குமேல் போய்விட்டால், 'ஐயையோ! இனிமேல் போடாதீர்கள்' என்று மன்றாடச் செய்கிறான். இம்மாதிரி ஒருத்தன் பூர்ண மனஸோடு திருப்தி தெரிவிக்கிறபோது தான் தாதாவுக்கும் தானத்தின் பலன் பூரணமாகக் கிடைக்கும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

பராந்தகன் பிரமித்தான். "ஆழ்வாரின் சீடரிடமா?.. இவரா... அப்படியானால்...?" என்றவனைக் கையமர்த்திய பகதத்தன், "ஆம். திருமங்கை மன்னரின் நான்கு சீடர்களை உலகம் அறியும். அவர்களில் தோரா வழக்கனிடம் தீட்சை பெற்றவர் இவர். குருவின் உத்தரவின்பேரில் இப்போது சோழ நாட்டுப் பணியாற்ற, வணிகராக இருக்கிறார்."

"அப்படியானால் விஷ்ணுசித்தர்... பரகாலதாஸர்...?"

"இவரேதான். அதிருக்கட்டும்..." என்ற பகதத்தன், சற்று நேரம் பராந்தகனை வெறித்து நோக்கினான். அவன் முகத்தில் சற்று உஷ்ணம் தெரிந்தது. "பராந்தகா, நீ அந்தக் கேள்வியைக் கேட்கவே மாட்டாயா?" என்றான் உஷ்ணம் குரலிலும் ஒலிக்க.

"எந்தக் கேள்வியை?" குழப்பத்துடன் வந்தது பராந்தகனின் பதில்.

பகதத்தனின் குரல் உயர்ந்தது. "அடேய், நீ மனிதன் தானா? அன்பு, பாசம், பந்தம் எதுவும் கிடையாதா உனக்கு? இத்தனை மன அழுத்தமா உனக்கு?"

பராந்தகனின் குழப்பம் உயர்ந்தது. "என்ன சொல்கிறாய் பகதத்தா? அன்புக்கும், பாசத்துக்கும் என் நிலைக்கும் என்ன தொடர்பு? பாராட்டி வளர்த்த தந்தையை இழந்தேன். உற்ற நண்பர்கள் கொல்லப்பட்டார்கள். இல்லமும் அழிந்தது. உயிருக்குயிரான உடன் பிறந்தவளையும் அந்தப் பாதகர்கள் கொன்று விட்டார்கள். பிறந்த மண்ணை விட்டு பாண்டிய நாடு, பல்லவ நாடு என்று அலைகிறேன். அன்பும் பாசமும் நான் யாரிடம் காட்ட?" - பராந்தகனின் குரலில் சோகம் வழிந்தது.

பகதத்தனுக்கு உண்மை புரிந்தது.

"பராந்தகா."

"சொல்."

"உன் தந்தை இறந்து கிடந்ததையும், நம் நண்பர்கள் மடிந்ததையும் கண்டாய்."

"கண்டேன்."

"கார்குழலி என்னவானாள்?"

"அவளை அந்த அரக்கர்கள் தூக்கிச் செல்ல முயன்ற போது தன்னையே மாய்த்துக் கொண்டாளா, அல்லது அவர்களால் கொல்லப்பட்டாளா, தெரியவில்லை. குருதி படிந்த மேலாடைகளையும் உடைந்த வளையல்களையும்தான் கண்டேன்."

"முட்டாளே, மூடனே, அவள் இறந்திருந்தால் உடலை அவர்கள் தூக்கிச் செல்வார்களா? எங்கேனும் எறிந்துவிட்டல்லவா செல்வார்கள்?"

"என்ன கூறுகிறாய் நீ?"

"கார்குழலி மடிந்து போகவில்லையடா முட்டாளே. இதே காஞ்சியில் உயிருடன் தான் இருக்கிறாள்."

பராந்தகனின் இதயம் ஒரு கணம்

நின்று மீண்டும் இயங்கியது. வார்த்தைகள் குழறின. ''கார்குழலி, கார்குழலி... நீ கண்டாயா?... எங்கே... எப்படி?''

''பராந்தகா, பதறாதே, பதறாதே. முழுவதுமாகக் கேள்'' என்ற பகதத்தன் சற்றுத் தயங்கிவிட்டுக் கூறினான். ''உன்னிடம் உண்மையை மறைத்தது தவறுதான். தானே கூறுவதாக கார்குழலி கூறியதால் நான் தாமதித்தேன். அதற்குள் இப்படியெல்லாம் நடந்துவிட்டது.''

''புரியும்படி சொல் பகதத்தா.''

''அன்று கார்குழலி, ஆலயத்துக்கு வந்தது என்னைக் காணத்தான். எங்கள் சந்திப்பு ஓராண்டுக் காலமாக நடக்கிறது. உன் தந்தையிடம் அவளை மணம் புரிந்து கொள்ள அனுமதி கேட்ட போது, நல்ல வாழ்வுக்குத் தேவையான பொருளையும், நல்ல பணியையும் பெற்று வந்து மணம் செய்து கொள் என்றார். அதன் பேரிலேயே நான் காஞ்சிக்கு வந்தேன். அவ்வப்போது வந்து கார்குழலியையும் சந்தித்தேன். அன்றும் என்னைச் சந்தித்து விட்டுச் செல்லும்போதுதான் ராஷ்டிர கூடர்களிடம் சிக்கி கொண்டாள். அவர்களை எதிர்த்துப் போராடிய போது, அவள் தோளில் வாள் வெட்டு ஒன்றும் விழுந்தது. மயங்கிய அவளை மகாராணி ரேவா தேவியிடம் கொண்டு சேர்த்து விட்டார்கள்.''

''பிறகு?''

''நான் பின்தொடர்ந்து வந்து அவளைத் தப்பிக்க வைக்க இருமுறை முயன்றேன். மகாராணியின் மாளிகையிலும் சென்று ரகசியமாகச் சந்தித்தேன். அது முதல் சந்திர்ப்பத்தை எதிர் நோக்கிக் காத்திருக்கிறேன்.''

பராந்தகனின் விழிகள் பனித்துக் கிடந்தன. ''பகதத்தா, உனக்கு நான் எப்படி நன்றி கூறுவேன்... சரி... பாண்டிய இளவரசியை மீட்கும்போது, கார் குழலியையும் மீட்டுச் சென்று விட வேண்டும்.''

''அது மட்டுமல்ல பராந்தகா....'' உள் அறையின் வாயிலிலிருந்து குணவர்மரின் குரல் ஒலித்தது. ''கொற்கையின் முத்துக்களையும் மீட்டுச் செல்ல வேண்டும்'' என்றவரின் தோற்றம் பெரிதும் மாறியிருந்தது.

சரிகைகள் மின்னிய தலைப்பாகையுடன், உயர்ரகப் பட்டு அங்கியும், கழுத்தில் ஆடிய மகர கண்டியும் மின்ன பெரும் வணிகனின் தோற்றத்துடன் நின்றார் குணவர்மர். மாறாமலிருந்தது அவரது முறுவலும், நெற்றியிலிட்ட திருமண்ணும்தான்.

அவரது கரங்களில் தந்தத்தாலான, வேலைப்பாடமைந்த பேழையொன்றும் இருந்தது. அந்தப் பேழையைக் கண்ட பகதத்தனின் விழிகள் வியப்பில் விரிந்தன.

''தலைவரே, இதையா இப்போது பயன்படுத்தப் போகிறீர்கள்?'' என்றான் வியப்பு குரலில் வழிய.

''ஆம்... இதைப் பயன்படுத்தும் தருணம் வந்து விட்டது. காஞ்சியில் என் வாணிபத்துக்கு ஒரு முடிவும் வந்து விட்டது. புறப்படுங்கள். நாம் இப்போது மகாராணியின் மாளிகைக்குச் செல்ல வேண்டும்'' என்றார் குணவர்மர்.

மகாராணியின் மாளிகையில் அந்தப் பேழையிலிருந்த பொருள் விளைவித்த ஜாலம், இந்திர ஜாலமாயிருந்தது. எவரையும் தன் கைப்பாவையாக்கி ஆட்டி வைக்கும் மகாராணி ரேவாதேவியையே மயங்க வைத்தது அது.

(தொடரும்)




''லஞ்ச ஊழல் பிரச்னையை மையமா வைச்சு, அந்த புரொட்யூசர் படம் எடுக்கிறாரே, டைட்டில் என்ன?''
''மாமூல் ராஜா.''
– மாமணி

**மேஷம்:** உங்க ராசிக்கான கிரகங்கள் சேர்ந்து 'ஒவ்வொரு பூக்களுமே' பாடறதால உங்க தன்னம்பிக்கை, துணிவு கூடி எதிர்ப்புகளை ஓட வெச்சுடும். தெய்வபலம் கூடுறதை நல்லபடியா பயன்படுத்துங்க. முக்கியமானவங்க உதவுவாங்க. உத்தியோகத்தில எதிர்பார்த்த அனுகூலமான செய்தி வந்து சேரும். யந்திரம், காண்ட்ராக்ட், ஜவுளி, ரியல் எஸ்டேட் தொழில்கள் லாபம் தரும். குடும்பத்தில ஒற்றுமைக்கு வழி பாருங்க. சுப காரியங்கள் ஈடேறும். பெண்கள் ஆரோக்கியத்தில் கவனம் செலுத்துங்க.

**ரிஷபம்:** சென்னையில இலேசா ஆரம்பிச்சிருக்கிற மழை, உங்க காட்டில 'சோ'ன்னு பெய்யுது. எடுத்த காரியமெல்லாம் வெற்றிதான். தாராளமான பண வசதிங்கறதால கொஞ்சம் பெரிய பர்ஸ் வாங்கி வெச்சுக்கோங்க. உத்தியோகத்தில அதிரடி அதிர்ஷ்டம் ஒண்ணு காத்திருக்கு. ஓட்டல், லாட்ஜ், டிராவல்ஸ், ஆபரணம், தொழில்கள் ஆதாயம் பெறும். புதிய சொத்து, பொருள் சேர்க்கையால குடும்பத்தில குதூகலம் நிறையும். பெண்களுக்கு புதிய ஆடை ஆபரணச் சேர்க்கை மகிழ்ச்சி தரும்.

**மிதுனம்:** கல்வி, விஞ்ஞானம், ஆராய்ச்சின்னு மூழ்கிக் கிடக்கறவங்க சாதனை செய்து பாராட்டுப் பெறும் நேரம் இது. புதிய அறிமுகங்கள், எதிர்பாராத பயணங்கள் நேரிடும். உத்தியோகத்தில் உற்சாகமான அனுகூலமான திருப்பம் நேரும். கலைத்துறை, யந்திரம், எலக்ட்ரானிக்ஸ், ரியல் எஸ்டேட் தொழில்கள்ல இருக்கறவங்களுக்கு ஆதாயம் கூடும். குடும்பத்தில் சிறு பிரச்னைகள் ஏற்பட்டு விலகும். எதிர்பாராத செலவுகள் வரலாம், உஷாரா இருங்க. பெண்களுக்கு சாதகமான வாரம்.

**கடகம்:** துணிவும், தன்னம்பிக்கையும் உங்க கிரெடிட். தெளிவும் நிதானமும் பக்க பலம். அப்புறம் என்ன, நினைத்ததை முடிப்பவன் தான் நீங்க. அப்படியே இருங்க. கொஞ்சம் தெய்வபலத்தையும் சேர்த்திங்கன்னா உங்களைப் பிடிக்க ஆளே இல்லை. உத்தியோகத்தில கொஞ்சம் கடுமையாக உழைக்க வேண்டி வரும். சுமுகமா பழகறது நல்லது. வெளிநாட்டு வர்த்தகம், கமிஷன், வாகனம், கெமிக்கல்ஸ்,




# நடக்குமென்பார்; நடக்கும்!

## அக்னிசர்மா பக்கம்

மருத்துவம் துறைகள்ல நல்ல முன்னேற்றம் ஏற்படும். குடும்பத்தில இதுவரை இருந்து வந்த கருத்து வேறுபாடுகள் மறைந்து ஒற்றுமை ஏற்படும். பெண்களுக்கு எண்ணம் போல எல்லாம் நிறைவேறும்.

**சிம்மம்:** துணிவும், தன்னம்பிக்கையும் கூடறதால எதிரிங்க கண்காணாமப் போயிடுவாங்க. எடுத்த காரியம் எல்லாம் வெற்றிகரமா நிறைவேறும். தேவைக்கேற்ப பணவசதி கிட்டும். உத்தியோகத்தில இதுவரை இருந்த தொல்லைகள் விலகி நிம்மதி கிடைக்கும். புதிய முயற்சிகள் கைகூடும். ஓட்டல், லாட்ஜ், டிராவல்ஸ், கெமிக்கல்ஸ் துறைகள்ல இருக்கறவங்க மளமளன்னு முன்னேறுவாங்க. குடும்பத்தில் விரோதங்களும், கருத்து வேறுபாடுகளும் மறையும். சுப மங்கள காரியம் நிறைவேறும். பெண்களுக்கு சிறப்பான வாரம்.

**கன்னி:** நடைப்பயணத்தை முதல்வர் பார்க்கிற பார்வை, உங்க ராசிக் கிரகங்களுக்கு வந்திருக்கிறதால, கொஞ்சம் பிரச்னைகள், குழப்பங்கள் இருக்கும். தெய்வ பலத்தை கூட்டிக்கிட்டிங்கன்னா சமாளிச்சிடலாம். எதிர்பாராத செலவு வேற காத்திருக்கு, உஷாரா இருங்க. உத்தியோகத்தில இடமாற்றம் ஏற்படலாம். கலைத்துறை, ஆபரணத் தொழில், ரியல் எஸ்டேட், துறைகள்ல கணிசமான முன்னேற்றம் கிடைக்கும். உறவினர்களும், உடன்பிறந்தவர்களும் ஆதரவு தர்றதால குடும்பத்தில மகிழ்ச்சி கூடும். பெண்களுக்கு மக்களால் மகிழ்ச்சி கிட்டும்.

**துலாம்:** பாடிக்கறக்கற மாட்டை பாடிக்கறக்கற வித்தை, உங்களுக்குக் கைவந்த கலை. எந்தக் கஷ்டமான காரியமும் உங்க கை பட்டா சுலபமா முடியும். சுபச் செலவுகளைச் சமாளிக்க ரெடியாயிருங்க. வி.ஐ.பிக்கள் ஆதரவு கூடும். உத்தியோகத்தில சகலரும் உங்களுக்கு அனுகூலமாயும், ஆதரவாயும் இருப்பாங்க. புதிய முயற்சி வெற்றி பெறும். இரும்பு, யந்திரம், எலக்ட்ரானிக்ஸ், துறைகள் மேன்மை பெறும். குடும்பத்தில நிம்மதி நிலவும். பெண்களுக்கு உற்சாகமான வாரம்.

**விருச்சிகம்:** இதுவரை தடைப்பட்டிருந்த காரியங்கள் எல்லாம் மளமளன்னு முன்னேறும். எதிர்ப்புகள் ஓய்ந்து போகும். தாராளமான பண நடமாட்டம் இருக்கும். உத்தியோகத்தில உற்சாகமான சூழ்நிலை நிலவும். காண்ட்ராக்ட்ஸ், கமிஷன், எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர் துறைகள் முன்னேறும். குடும்பத்தில வழக்கு விவகாரங்கள் நல்லவிதமா முடிஞ்சு, மகிழ்ச்சி ஏற்படும். பெண்களுக்கு நினைச்சபடியே எல்லாம் நடக்கும்.

**தனுசு:** சிறு பிரச்னைகள், தொல்லைகள், எடுத்த காரியத்தில் தடங்கல்கள்னு கொஞ்சம் சிக்கலான வாரமா இருந்தாலும், எல்லாம் சீக்கிரமே ஓய்ஞ்சு சுமுகமாகும். உத்தியோகத்தில எதிர்பாராத திருப்பம் காத்திருக்கு. புதிய முயற்சி அனுகூலம் தரும். ஓட்டல், லாட்ஜ், டிராவல்ஸ், கெமிக்கல்ஸ் தொழில்கள் அனுகூலம் பெறும். குடும்பத்தில புதிய சொத்து சேர்க்கை மகிழ்ச்சி தரும். பெண்களுக்கு அனுகூலமான வாரம்.

**மகரம்:** வரலாமா வேண்டாமான்னு யோசனை பண்ணிக்கிட்டிருந்த யோக காலம், வந்துடலாம்னு முடிவு பண்ணிட்டதால, சகல காரியங்களிலும்



''மன்னா! போக்குவரத்து துறையில் நீங்கள் அறிமுகப்படுத்திய திட்டம் மக்களுக்கு மிகவும் பயனளிக்கிறது!''

''எதைச் சொல்கிறீர்கள்?''

''share தேர் திட்டத்தைத்தான் மன்னா!''

- லீலா

# இது நல்ல நேரம்

| கிழமை | தேதி | நட்சத்திரம் | திதி | மற்றவை |
|---|---|---|---|---|
| புதன் | செப்.22<br>புரட்.6 | மூலம் | அஷ்டமி/<br>நவமி | கேதாரகௌரி விரதம் |
| வியாழன் | செப்.23<br>புரட்.7 | பூராடம் | தசமி | திருப்பதி ரதோத்ஸவம் |
| வெள்ளி | செப்.24<br>புரட்.8 | உத்திராடம் | ஏகாதசி | ஸ்ரீரங்கம்<br>பவித்ரோத்ஸவம் |
| சனி | செப்.25<br>புரட்.9 | திருவோணம் | துவாதசி | ஒப்பிலியப்பன்<br>கருடசேவை |
| ஞாயிறு | செப்.26<br>புரட்.10 | அவிட்டம் | திரயோதசி | பிரதோஷம்<br>கபாலீச்வரர் உத்ஸவம் |
| திங்கள் | செப்.27<br>புரட்.11 | பூரட்டாதி | சதுர்த்தி | அனந்த விரதம் |
| செவ்வாய் | செப்.28<br>புரட்.12 | உத்திரட்டாதி | பௌர்ணமி | திருவண்ணாமலை,<br>சிதம்பரம், குடந்தை<br>கும்பேஸ்வரர் - விழா |

நல்ல முன்னேற்றம் ஏற்படும். பெண்களால ஒரு அனுகூலம் ஏற்படும். உத்தியோகத்தில இதுவரை எதிர்த்தவங்க ஆடி அடங்கி ஒதுங்கிப் போயிடுவாங்க. இரும்பு, யந்திரம், தோல் பொருள்கள், எண்ணெய் வகை வியாபாரங்கள் மேன்மை பெறும். குடும்பத்தில் ஒற்றுமை கூடி மகிழ்ச்சி தரும். பெண்களுக்கு உற்சாகமான, உல்லாசமான வாரம்.

**கும்பம்:** உங்க தெய்வ பலமும், ஈடுபடும் கூடக்கூட, எல்லாக் காரியங்களிலும் வெற்றி நெருங்கி வரும். தேவைக்கேற்ற பண வசதி கிடைக்கும். வி.ஐ.பி.க்கள் ஆதரவு கை கொடுக்கும். பயணங்கள்ல மட்டும் எச்சரிக்கையா இருங்க. உத்தியோகத்தில பழைய கோரிக்கைகள் நிறைவேறி, அனுகூலமான திருப்பம் நேரும். கலைத்துறை, பத்திரிகை, அச்சகம், எண்ணெய் வகை, தொழில்கள் ஏற்றம் பெறும். குடும்பத்தில பொதுவா அமைதி நிலவும். பொருளாதார நெருக்கடி வரலாம். உஷாரா இருங்க. பெண்களுக்கு எண்ணம் போல எல்லாம் நடக்கும்.

**மீனம்:** உங்க ராசிக்கான கிரகங்கள் சுமுகமான பேச்சுவார்த்தைக்கு இணங்கி விட்டதால, சகல காரியங்களிலும் தடையில்லாத முன்னேற்றம் கிட்டும். அரசு விவகாரங்கள்ல அனுகூலமான பதில் கிடைக்கும். பண நடமாட்டம் தாராளமாகவே இருக்கும். உத்தியோகத்தில உங்களை அடிக்க ஒரு அதிர்ஷ்டம் காத்திருக்கு. புதுமுயற்சிகள் வெற்றி தரும். கலை, எலக்ட்ரானிக்ஸ் கம்ப்யூட்டர், எலக்ட்ரிகல்ஸ் துறைகள்ல அமோக லாபம் கிடைக்கும். அரசியல்வாதிகளுக்கு புதிய திருப்பம் காத்திருக்கு. குடும்பத்தில குதூகலம் நிறைஞ்சிருக்கும். குழப்பம், சஞ்சலம், எல்லாம் மறையும். பெண்களுக்கு ஆடை ஆபரணச் சேர்க்கையால மகிழ்ச்சி சேரும்.

# நீங்கள் கேட்டவை - தராசு

● வி.என். கிரிதரன், புவனகிரி

? சம்பாதித்த பெயரைப் பயன் படுத்திப் பணம் தேடுவது, தேடிய பணத்தைக் கொண்டு பெயரைச் சம்பாதிப்பது... எது சரி? எது தவறு?

! இரண்டுமே செய்த ஐஸ்வர்யா ராயின் மெழுகுச் சிலை லண்டன் மியூசியத்தில் வைக்கப்படவிருக்கிறது. ஆக, இரண்டுமே சரியாகத்தான் இருக்க வேண்டும். புத்திசாலித்தனமாக நடந்து கொண்டால்!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? கலைத்துறையினர் உண்ணாவிரதம் இருப்பதால், திருட்டு வி.சி.டி.யை ஒழிக்க முடியுமா...?

! வாய்ப்பே இல்லை! பூஜையின் போதே ஆடியோ ரைட்ஸ் போல வி.சி.டி. ரைட்ஸ் கொடுத்தே படம் எடுப்பதுதான் இனி அறிவுடைமை!



● 'வீர' விளக்கம்!



● கற்றதும்...

● ச.ஆ. கேசவன், இனாம்மணியாச்சி

? பள்ளிகளில் சாதி, மதம் கோரப்படாத மாணவர் சேர்க்கை பற்றிய சிந்தனை, இன்னும் எழாதது ஏன்?

! சிந்தனை எழாமல் இல்லை. நடைமுறையில் சாத்தியமில்லாது போவதற்கு, தலைவர்களின் ஜாதி-மத அரசியலே காரணம். வோட்டை மறந்து நாட்டை நினைத்தால் பல மாற்றங்கள் நிகழும்.

● எஸ்.முரளி, குறிஞ்சிப்பாடி

? வயலில் இறங்கி ஏர் உழுதாராமே வைகோ?

! உழுது கொண்டிருந்தால் மட்டுமே போதாதே.. விதைத்து, நீர் பாய்ச்சி, களை எடுத்து, உரமிட்டு, காப்பாற்றி வளர்த்தால் தானே அறுவடைக்குத் தயாராகும்!

● ஜி. ராமதாஸ், உள்ளிக்கடை

? நாத்திகவாதம் புரிவதற்கும் ஒரு நியாயம் இருக்கிறதல்லவா?

! நியாயம் இருக்கிறதோ இல்லையோ... சுதந்திரம் இருக்கிறது!

● க. சம்பத், வேலாயுதம்பாளையம்

? 'காவிரிப் பிரச்னைக்காக உடல், பொருள், ஆவி என எல்லாவற்றையும் பணயமாக வைத்து கர்நாடகத்தை எதிர்க்கத் தயாராக உள்ளோம்' என்று கருணாநிதி கூறியிருக்கிறாரே...?

! எதற்கு அத்தனை சிரமம்? இன்றைய

## நாத்திகவாதம் செய்ய நியாயம் வேண்டாமா?

மத்திய அரசில் இடம்பிடிக்கக் காட்டிய தீவிரத்தை, பதவிகளை இழப்பதிலும் காட்டத் தயாராக இருப்பதாக உணர்த்தினால் போதும்... பயன் இருக்கும். ஆனால், இப்போதைக்கு மேட்டூர் நிரம்பிவிட்டதால் பிரச்னை ஒத்திப் போடப்படும்!

● தமிழருவி, குடந்தை ★

? பத்திரிகைக் கணிப்பு ஒன்றில் தமிழக முதல்வர் 'ஜெ' தொடர்ந்து கடைசி இடத்திலேயே இருப்பது தமிழனுக்குத் தலைகுனிவு இல்லையா...?

! அதைவிடத் தலைகுனிவு, ஜெயா டி.வி. அந்தப் பத்திரிகையை ஓரவஞ்சனையுடன் மட்டம் தட்டிய விதம்!

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்

? 'கறை படிந்த அமைச்சர்கள்

விலகும் வரை போராட்டம் ஓயாது' என பா.ஜ.க. தலைவர் வெங்கய்யா நாயுடு அறிவித்துள்ளாரே...?

! இந்த விஷயத்துக்காக நாடாளுமன்ற நடவடிக்கையைத் தடை செய்தது குறித்து, அத்வானி பி.பி.ஸி. பேட்டியில் வருத்தம் தெரிவித்து வாயை மூடுவதற்குள், வெங்கய்யா நாயுடு வேறு ராகம் பாடுவதைப் பார்க்க, அத்வானி பி.பி.ஸி. டி.வி.க்காக நடித்தார் என்றுதான் முடிவுக்கு வரவேண்டியிருக்கிறது.

• டபுள் ஓகே!

• சங்கடச் சிறப்பு!

• ஆர். நாகராஜன், சென்னை - 117

? சேது சமுத்திர திட்டம் நடைமுறைக்கு வந்ததற்கு யார் காரணம்...?

! சேது சமுத்திரத்தின் பூகோள அமைப்புதான் காரணம்!

• பெற்றதும்!



• இந்திராணி சண்முகம், திருவண்ணாமலை ❐

? 'நடிகர் கமலுக்கு இந்த நூற்றாண்டின் சிறந்த மனிதர்' என்ற விருது வழங்கப்பட்டிருப்பது சரியா...?

! தப்புதான்! மிகைப்படுத்திய பட்டங்களும்,

☐ ரூ.100 பரிசு பெறுபவர் :
இந்திராணி சண்முகம்,
117, பைபாஸ் சாலை,
திருவண்ணாமலை
- 606 601

விருதுகளும், அளிக்கப்படுபவருக்குப் பெருமையைக் காட்டிலும், தர்மசங்கடத்தையே அளிக்கும்.

● பனிமலர், மதுரை - 7

**? 'அரசியல்வாதிகள் வாரத்தில் ஒரு நாள் மௌன விரதம் இருக்க வேண்டும்' என்று ஒரு சட்டம் கொண்டு வந்தால் எப்படி இருக்கும்...?**

! அன்று அறிக்கைகள் எழுத்து மூலம் மீடியாவைச் சென்றடையும்!

● காட்டாவூர் இலக்கியன், சென்னை - 52

**? இராம. கோபாலன் கலைஞருக்கு பகவத் கீதையைப் பரிசளிக்க, கலைஞர் அவருக்கு 'கீதையின் மறுபக்கம்' என்ற கி. வீரமணியின் நூலைத் தந்தது பற்றி...?**

! அவரவர் நம்பிக்கையை அவரவர் பிரகடனப்படுத்திக் கொண்டுள்ளனர்.

● எம். பாஸ்கர், திண்டுக்கல்

**? 'பார்ப்பனர்கள் தங்களைத் தமிழர்கள் என்று சொல்லிக்கொள்ளலாம். ஆனால் திராவிடர்கள் என்று சொல்ல முடியாது' என வீரமணி கூறியுள்ளது பற்றி...?**

! எல்லோரும் மனிதர்கள் என்று சொல்ல, எப்போதைய்யா கற்றுக்கொள்வோம்!

● ஜே.அர்ஜுன், சென்னை - 49

**? என் தந்தைக்கு மாதச் சம்பளம் ரூபாய் பன்னிரண்டாயிரம். தமிழ்நாட்டு முதல்வர் ஜெயலலிதாவுக்குச் சம்பளம் ரூபாய் பத்தாயிரம்தான்... மிகக் குறைவாக உள்ளதே?**

! முதல்வருக்கும், அமைச்சர்களுக்கும் சம்பளம் குறைவானாலும், இதர சலுகைகள் மிகுதி. சலுகைகளைக் குறைத்து, சம்பளத்தைக் கூட்டினால்தான் இதர துறைகளுடன் ஒப்பிடுதல் சாத்தியம்.

● எச். ஆன்டனி தமிழரசன், மும்பை - 17

**? 'நான் கைது செய்யப்படுவதற்கு சோனியாதான் காரணம்' என்ற உமா பாரதியின் குற்றச்சாட்டுக்கு மௌனம் சாதிக்கும் சோனியா பற்றி...?**

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
தமிழருவி,
தெற்குத் தெரு,
புதூர் அஞ்சல்,
குடந்தை - 612 205.

! அர்த்தமுள்ள மௌனம். குறிப்பாக, எதிரணி மிக அதிகமாகப் பேசுவதால் மௌனத்தின் மதிப்பு கூடுகிறது.

● குவளை எழில், சென்னை - 92

**? சென்ஸிடிவ் ஆன விஷயம் என்று அறிந்தும், பகவத் கீதையைப் பற்றி கலைஞர் ஏன் இப்படிப் பேசினார்? இராம.கோபாலன் வேறு 'வழக்குப் போடுவேன்' என்கிறாரே...?**

! வழக்கு செல்லுபடியாகாது - கருத்துக் கூறும் உரிமை என்பது, அடிப்படை உரிமையாக இருப்பதால். ஆனால், ஹிந்து பக்தர்கள் மனம் புண்படும்படியாகப் பேசுவது கருணாநிதிக்குப் புதிதல்ல... அவர்களுடைய உணர்வுகளை மதிப்பதை அவர் என்றுமே அவசியமாகக் கருதியதில்லை. ஆனால் 'யார் மனசையும் புண்படுத்தும் எண்ணம் எனக்கில்லை' என்று தப்பாமல் ஓர் அறிக்கை மறுநாள் வெளிவரும்!

● எம். ஹரிஹரன், பழனி

**? உலகத்தில் முதலில் தோன்றியது இரவா... பகலா...?**

! இரண்டும்தான்... ஒரு பகுதி இருளிலும் ஒரு பகுதி ஒளியிலும் ஆழ்ந்திருக்கும். இன்னும் அப்படியே... மனிதர் மனங்களைப் போல!



# பிட்டா படிங்க

* குஷ்வந்த்சிங்

● புறநானூற்றை எளிய முறையில் அறிமுகப்படுத்தப் போய், அதனால் ஏற்பட்ட விமர்சனப் புயலில் சிக்கித் தவித்த சுஜாதா, சமீபத்தில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியில் உரையாடிய பொழுது, தம்மை ஓர் அறிவியல் எழுத்தாளர் என்று அறிவித்துக் கொண்டார்.

● கணிப்பொறியில் தான் எழுதுகிறார் எஸ். ராமகிருஷ்ணனும். எழுத்துகளைச் செதுக்கிச் செதுக்கி எழுதுவதற்குக் கணிப்பொறி உபயோகமான சாதனம் என்னும் இவர், தமது அட்சரம் இணையப் பத்திரிகையில் தமிழில் சமீபத்தில் வெளிவந்த நூறு சிறந்த புத்தகங்களின் பெயர்களை வெளியிட்டிருக்கிறார்.

● காட்டுயிர்கள், சுற்றுப்புறச் சூழல், பழங்குடியினர் பற்றிய பல சுவையான கட்டுரைகளைத் தொடர்ந்து எழுதி வருகிறார், தியடோர் பாஸ்கரன். தமிழில் இது ஒரு புதுமையான முயற்சி.

● தமது 90வது வயதில் குஷ்வந்த்சிங் ஒரு புதிய சிறுகதைத் தொகுப்பை வெளியிட்டிருக்கிறார். பெயர் 'பாரடைஸ் அண்டு அதர் ஸ்டோரிஸ்.' இப்புத்தகத்தில் நியூமராலஜி போன்ற ஜோதிட நம்பிக்கைகளைக் கிண்டலடித்திருக்கிறாராம்.



* ஜெயகாந்தன்

● ஜெயகாந்தன் தற்பொழுது எதுவும் எழுதாவிட்டாலும் இலக்கியம் தொடர்பான விவாதங்களுக்காக ஒரு குழு அமைத்து அதில் பங்கேற்கிறார். இக்கூட்டத்தில் யார் வேண்டுமானாலும் தங்களது கருத்துகளைத் தெரிவிக்கலாம்.



* வல்லிக்கண்ணன்



* தியோடர்

* ராமகிருஷ்ணன்

● புத்தக மதிப்புரைக்காக வல்லிக்கண்ணன் வீட்டுக்கு புத்தகங்கள் வந்து குவிந்த வண்ணம் இருக்கின்றன. எல்லாவற்றையும் படித்துப் பார்த்துத் தேவையான அறிவுரைகளை இளம் எழுத்தாளர்களுக்கு வழங்கி ஊக்கப்படுத்தி வருகிறார்.



* சுஜாதா



- வண்ணத்துப்பூச்சி

மாணவர்கள் கட்டாயம் படிக்க வேண்டிய தொடர்!

# வத்திக்குச்சி

உங்களுக்கு, தினம் சாப்பாட்டில் நெய் சேர்த்துக் கொள்கிற பழக்கம் உண்டா? சந்தோஷம்! பழக்கம் இல்லையா? ரொம்ப சந்தோஷம். நான் இப்போது, 'சாப்பாட்டில் தினமும் தவறாமல் நெய் சேர்த்துக் கொள்ளுங்கள்' என்று ஆலோசனை சொல்லப் போவது கிடையாது. ஒரு விஷயத்தை விளக்குவதற்கு, நெய்யை உதாரணமாய்ச் சொல்லப் போகிறேன். அவ்வளவு தான்!

நெய் எங்கேயிருந்து கிடைக்கிறது?

உடனே 'ஆவின் விற்பனை நிலையத்திலிருந்து கிடைக்கிறது' என்றோ 'கடையிலிருந்து' என்றோ 'கடி ஜோக்' அடிக்காதீர்கள். நெய், பாலிலிருந்து கிடைக்கிறது என்பது நாம் அனைவருமே அறிந்ததுதான். ஆனால் ஒரு லிட்டர் பாலை ஒரு பாத்திரத்தில் ஊற்றி, 'பால் இங்கே! நெய் எங்கே?' என்று கேட்டால் உடனே ஒரு ஸ்பூனை அதில் போட்டு, நெய்யை எடுத்துத் தந்துவிட முடியுமா?

பாலைக் காய்ச்சி, அது நன்கு ஆறினபின் துளி மோர் சேர்த்து பாலை உறைய வைக்க வேண்டும். சில மணி நேரங்களில் பால், தயிர் ஆகும். பிறகு தயிரைக் கடைந்து, வெண்ணெய் எடுப்பார்கள். இன்று இயந்திரங்கள் மூலம் பாலிலிருந்து வெண்ணெய் எடுக்கிறார்கள். வெண்ணெயை உருக்கினால் நெய் கிடைக்கும். ஆக, பாலிலிருந்து நிச்சயமாக நம்மால் நெய் எடுக்க முடியும். ஆனால் அதற்கு ஒரு முயற்சி தேவைப்படுகிறது. அது போலத்தான், நாமும், முயற்சி செய்து எந்த விஷயமானாலும் அதனை சாதிக்க வேண்டும். மனம் தளராமல் செய்தால், நிச்சயம் வெற்றி கிடைக்கும்.

ஒரு மாணவன் எப்படி இருக்க வேண்டும் என்பதை ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் சொல்லி இருக்கிறார். தீக்குச்சி போல இருக்க வேண்டுமாம். பட் டென்று உரசியவுடன் சட்டென்று தீப் பிடித்துக் கொள்ளும் குணம், நல்ல தீக்குச்சிக்கு உண்டு. ஈரமில்லாமல் உலர்ந்து, சுத்தமான தீக்குச்சி மட்டுமே தீப்பெட்டியில் உரசின உடன் நெருப்பு பற்றிக் கொள்ளும். நமுத்துப்போன தீக்குச்சியை உரசிப் பார்த்தால், பலனில்லாமல் தூர எறிய வேண்டியதுதான்.

நல்ல தீக்குச்சி போல ஒரு மாணவன் இருக்க வேண்டுமானால், அவனுக்கு தளராமல் முயற்சி செய்யும் குணமும் வேண்டும். இறை உணர்வும் வேண்டும். இறை உணர்வு என்பது மின்சாரம் போன்றது. மின்சாரத்தை நம் கண்களால் பார்க்க முடியுமா? மின்சாரம் கண்ணுக்குத் தெரியாது. ஆனால், ஒரு மின்சாரக் கம்பியை கையால் தொட்டால் என்ன ஆகும்? ஷாக் அடிக்கும். இறை உணர்வு என்பதும் மின்சாரம் போன்றதுதான்.





சுவாமி போதமயானந்தா

# பத்திக்காதுடா...!

அதை நாம் நம்ப வேண்டும். அந்த இறை உணர்வை, மின்சாரத்தை நம் வாழ்க்கைக்கு உபயோகித்துக் கொள்ளுவது மாதிரி, நம் முன்னேற்றத்துக்கு நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

சுவாமி விவேகானந்தர் சொல்லும் ஒரு மாணவருக்குரிய இலக்கணம் என்ன தெரியுமா? இரும்பு போன்ற வலுவான தசை; எஃகு போன்ற நரம்பு; இடி போன்று எதற்கும் தளராத கூர்மையான மனம்; இவற்றுடன் முதிர்ச்சியான புத்திசாலித்தனம்... இவையே ஒரு புத்திசாலியான மாணவனுக்கு இலக்கணம்.

மாணவர்கள் இளம் வயதிலேயே தங்கள் மனங்களில் நல்ல எண்ணங்களை வளர்த்துக் கொள்ள வேண்டும். நல்ல எண்ணங்கள் பெரிய அளவில் வளருகிறபோது, அவை நல்ல செயல்கள் செய்யத் தூண்டுதலாக அமையும். ஒருவர் நல்ல செயல்களை ஆர்வத்துடனும், ஈடுபாட்டுடனும் முழு மூச்சாய்த் தொடர்ந்து செய்து வருகிறபோது, நல்ல செயல்கள் செய்வது என்பது, அவரது பழக்கமாகி விடும்.

நல்ல பழக்க வழக்கங்கள் கொண்ட ஒருவர், நல்ல குணங்களைக் கொண்டிருப்பார். நல்ல குணங்களைக் கொண்டு வாழ்க்கை நடத்தும் ஒருவரின் வாழ்க்கை, அல்லது விதி நல்லவிதமாகவே இருக்கும் என்பதில் சந்தேகமே இல்லை.

**ம**றுபடியும் ஒரு கதை சொல்ல நான் ரெடி. கதை கேட்க நீங்க எல்லாம் ரெடியா? திடீரென்று எனக்கு தபேலா வாசிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று ஆசை வந்தது. ஒரு குருவிடம் என் விருப்பத்தைத் தெரிவிக்க, அவரும் எனக்கு தபேலா கற்றுக் கொடுக்கச் சம்மதித்தார். நான் தினமும் காலையில் தபேலா கற்றுக் கொள்ளப் போகிறபோது, குருஜி, தனது தபேலாவை சுத்தமாய்த் துடைத்து, அதன் முன் அமர்ந்து பிரார்த்தனை செய்துவிட்டு, அப்புறம்தான் பாடம் நடத்துவார். எனக்கு, 'என்னடா! தபேலா ஓர் இசைக் கருவிதானே! இதற்குப் போய், சாமி மாதிரி பக்தி சிரத்தையுடன் இத்தனை முக்கியத்துவம் தருகிறாரே!' என்று நினைத்துக் கொள்வேன். ஒருநாள் எனது எண்ணத்தையும் அவரிடம் சந்தோஷமாகக் கேட்டேன். அதற்கு அவர் ஒரு குட்டிக் கதை சொன்னார். இன்னொரு தபேலா ஜீனியஸ் பற்றிய கதை அது.

பனாரஸ் நகரில் ஒரு தபேலா வித்வான் வாழ்ந்து வந்தார். அவருக்கு 'திரக்வா' என்று பெயர். அவரது உண்மைப் பெயரே 'திரக்வா' இல்லை. நீங்கள் எல்லாம் கூட உங்கள் வகுப்பில் ஆசிரியர்களுக்குச் 'செல்லப் பெயர்' வைப்பீர்களே, அதுபோல, பொதுமக்கள் அவருக்கு வைத்த பெயர்தான் அது. எதற்காக அப்படி ஒரு பெயரை வைத்தார்கள் என்றால், 'திரக்வா' என்பது ஒரு வகையான தாளம். அதில், அந்த வித்வான் மிகத் திறமைசாலி. அவர் அந்த தாளத்தை வாசிக்கிறபோது, மொத்தப் பேரும் மகுடிக்குக் கட்டுப்பட்ட பாம்பைப் போல, கேட்டு லயித்துப் போவார்கள்.

தென்னிந்தியாவிலிருந்து போன ஓர் இளைஞன், அவரிடம் தபேலா கற்றுக் கொண்டான். ஒருநாள் தபேலா வித்வான் பூஜையில் இருந்தார். அந்த இளைஞன் தன் பாட்டுக்குக் குருவிடம்

கற்றுக் கொண்டவற்றை எல்லாம் விரலில் விளையாடினான். வித்வான் பூஜையில் இருந்தபடியே, தமது சீடனின் வாசிப்பையும் கவனித்துக் கொண்டிருந்தார். வாசித்து முடித்தான் அந்த இளைஞன். எழுந்து, தனது தபேலாவை, அதற்கு உரிய பெட்டிக்குள் எடுத்து வைத்தான். அப்படி வைக்கிறபோது, தபேலா, பெட்டியின் உள் பக்கத்தில் இலேசாக உராய்ந்து, ஒருவித மெல்லிய ஒலியை ஏற்படுத்தியது.

அவ்வளவுதான், அது காதில் விழுந்த மாத்திரத்தில், அந்த வித்வான் பூஜையை அப்படியே விட்டுவிட்டு, ஓடி வந்தார். பெட்டிக்குள் மாணவன் வைத்த தபேலாவை எடுத்துப் பார்த்தார். அதில் பெட்டிக்குள் வைக்கிறபோது ஏற்பட்ட உராய்வு காரணமாக, இலேசான கீறல் ஏற்பட்டிருந்தது. அதைக் கவனித்தார் வித்வான். அவரது கண்களிலிருந்து கண்ணீர் கொட்ட ஆரம்பித்துவிட்டது.

சீடன் பதறிப் போனான். எதற்காக தனது குருஜி இப்படி அழுகிறார் என்பது கூட அவனுக்குப் புரியவில்லை. "தபேலா ஒரு குழந்தை மாதிரி. அதில் கீறல் ஏற்பட்டு விட்டதே! என்றுதான் அழுகிறேன்" என்றார் வித்வான்.

"'தபேலா மீது கீறல் விழுகிறாற்போல, அதை நீ உள்ளே வைத்திருக்கிறாய் என்றால், அதை உள்ளே வைக்கும்போது, நீ போதிய கவனம் செலுத்தவில்லை என்றுதான் அர்த்தம். தபேலாவை வாசித்த பின் அதற்குரிய இடத்தில் வைக்கிற போது, நீ அஜாக்கிரதையாய் இருக்கிறாய் என்றால், தபேலா வாசிக்கிறபோது மட்டும் எப்படி உன்னால் அதில் முழு கவனமும் செலுத்தி வாசிக்க முடியும்? முழுக் கவனம் செலுத்தாதபோது, உன் உடம்பு எப்படி உனது முழுக்கட்டுப்பாட்டில் இருக்கும்?" என்று கேட்டார்.

இதற்கு முன்பு, உடம்பைக் கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்ளுவது குறித்த ஜப்பானிய நடைமுறை பற்றிச் சொன்னது நினைவிருக்கிறதல்லவா? உடம்புக்கு உரிய முக்கியத்துவம் தரப்பட வேண்டும். சுவாமி விவேகானந்தர் 'கூர்மையான அறிவு கொண்ட வலுவான உடல் தேவை' என்று சொல்லி இருக்கிறார். தமிழில் 'சுவர் இருந்தால்தானே சித்திரம் வரைய முடியும்?' என்று சொல்லுவது வழக்கம்தானே?

சுவாமி விவேகானந்தர், 'வலுவான உடம்பு தேவை' என்று குறிப்பிட்டுச் சொல்லுவதற்குக் காரணம் இருக்கிறது. இந்தியர்கள் நல்ல, கூர்மையான அறிவு கொண்டவர்கள். ஆன்மிகத்தில் நாட்டம் கொண்டு, பக்தி, பூஜை ஆகியவற்றின் மூலம் மனோரீதியில் பலமானவர்கள். ஆனால் நாம் உடல் ஆரோக்கியத்துக்கும், வலிமைக்கும் போதிய முக்கியத்துவம் தருவது கிடையாது.

பள்ளிக்கூடங்களில்கூட, ஒரு வாரத்தில் பாடம் சொல்லித் தருவதற்கு எத்தனை பீரியட்கள் ஒதுக்கப்படுகின்றன? விளையாட்டு மற்றும் உடற்பயிற்சிக்கு எத்தனை பீரியட்கள் ஒதுக்கப்படுகின்றன?

பல பெற்றோர்கள், தங்கள் பிள்ளைகளிடம் "நல்லா படிக்கணும்" என்று சொல்லி வளர்க்கிறார்கள். ஆனால், 'ஸ்போர்ட்ஸ்ல கெட்டிக்காரனா வரணும்' என்று ஊக்கம் தரும் பெற்றோர்கள் எத்தனை பேர்?

கொஞ்சம் யோசியுங்கள்.

(இப்போதைக்கு விடைபெறுகிறேன்)

படம்: **யோகா**

---

"குடும்பத்தோடு பார்க்கிற மாதிரி இந்தப் படத்தை ஆபாசமே இல்லாம எடுத்திருக்கேன்..."

"'கட்'டற்ற மகிழ்ச்சி!

– தஞ்சை தாமு



# எப்படி கிடைக்கும் தங்கம்?

**சமீபத்தில் பாகிஸ்தானில் நடந்த தெற்காசிய விளையாட்டுப் போட்டிகளிலும், இதர சர்வதேசப் போட்டிகளிலும் பெருமைமிக்க தங்க மெடல்களை அள்ளி வந்த சீனியர் அத்லெட்கள் முதல், ஆர்வமுள்ள பத்து வயது குட்டீஸ் வரை தற்பொழுது ப்ராக்டீஸ் பண்ண எந்த கிரவுண்டும் கிடைக்காமல், நடக்கவே மூச்சு வாங்கும் பீச் மணலில் வேறு வழியின்றி ஓடியபடி ப்ராக்டீஸ் செய்துகொண்டிருக்கும் கொடுமை பற்றித் தெரியுமா உங்களுக்கு?**

தமிழ்நாட்டைச் சேர்ந்த ப்ரைம் ஸ்போர்ட்ஸ் அகாடமி, தற்போது கிட்டத்தட்ட முந்நூறு அத்லெட்களைக் கொண்ட ஒரு முன்னணி அமைப்பு. இவர்கள் ஐந்து வருடங்களுக்கு முன்பு சென்னை மருத்துவக் கல்லூரியின் (எம்.எம்.சி.) மைதானத்தை, காலை - மாலை என இரு வேளைகளிலும் ப்ராக்டீஸுக்குப் பயன்படுத்திக்கொள்ள முறையாக அனுமதி வாங்கியிருந்தனர். பிரபல அத்லெட்களும் கோச்சுகளுமே, புதர்க் காடாயிருந்த மைதானத்தை, தங்கள் கைகளால் சுத்தப்படுத்தி, இரு மாதங்களுக்கு முன்பு வரையிலும் ப்ராக்டீஸ் கிரவுண்டாக உபயோகித்து வந்திருந்தனர். இந்த உற்சாகத்தில் கடுமையாக ட்ரெயினிங் செய்து பல சாதனைகளைப் புரிந்து சர்வதேச அளவிலும் மின்னினர் நம் தமிழ்நாட்டு தங்கங்கள்.

ஆமை புகுந்த இடம் மட்டுமல்ல... அரசியல் புகுந்த இடமும் உருப்படாமல்தானே போகும்? என்ன ஆனதோ ஏதானதோ... திடீரென கடந்த ஒன்றரை மாதத்திற்கு முன்பு "இனிமேல் நீங்கள் மாலையில் எங்களுடைய கிரவுண்டை உபயோகப்படுத்தக் கூடாது" என்று எம்.எம்.சி. நிர்வாகம் கட்டளையிட்டு 'பொசுக்'கென்று பலர் கனவுகளைச் சிதைத்துள்ளது.

"சென்ட்ரல் அருகே இருப்பதால் எங்கிருந்தோ வரும் எங்கள் அத்லெட்களுக்கெல்லாம், போக்குவரத்து ரீதியாகவும் எம்.எம்.சி. மைதானம் வசதியாக இருந்தது. காலையில் பள்ளி, கல்லூரிகளுக்குச் செல்பவர்கள் எவராலும் ப்ராக்டீஸுக்கு வர முடியாது. அதனால் மாலை நேரம்தான் சரியான தருணம். இன்றும் கூட அந்த கிரவுண்டை எவரும் பயன்படுத்தாத சூழ்நிலையில், என்ன காரணத்திற்காக எங்களை உள்ளே நுழைய விட மறுக்கிறார்கள் என்பது புரியாத புதிராகவே உள்ளது. இதனால் சமீபத்தில் மும்பையில் நடந்த தேசிய அளவிலான அத்லெடிக் போட்டியில்கூட, யாரும் கலந்து கொள்ள முடியாமல் போய் விட்டது" என்று மனம் உடைந்து பேசினார் அகடமியின் செயலாளர் சங்கர்.

• கே.என். ப்ரியா





• பீச் மணலில் பயிற்சி!...



• நாகராஜன்



• சங்கர்

சென்னையிலுள்ள பல கல்லூரிகளில், பள்ளிகளில் இவர்கள் முறையிட்டும், எல்லோரும் ஒரு தனியார் அமைப்பிற்கு தங்களுடைய கிரவுண்டை ஒதுக்குவதா என்று எடுத்த எடுப்பிலேயே மறுத்துள்ளனர்.

அத்லெட் என்றால் அனுதினமும் ஓட வேண்டும். முறையான ப்ராக்டீஸ் செய்ய வேண்டும் என்றிருப்பதால், வேறு வழியின்றி சென்னை போலீஸ் கமிஷனர் அனுமதியுடன், தற்பொழுது மெரீனா பீச்சில் தங்கள் ஃபிட்னஸ் லெவலை நிலைப்படுத்துவதற்காக, தினமும் காதலர்கள், பல ஊர் கும்பல் என ஊர் உலகமே புழங்கும் இடத்தில் ப்ராக்டீஸ் செய்து வருகின்றனர்.

''பீச் மணலில் ஓடுவதும் பயிற்சியெடுப்பதும், ஒரு அத்லெட் மற்றும் கோச்சிங் விதிகளுக்கு முரணானது. ஆனால் இதையும் விட்டால் வேறுகதியில்லையே எங்களுக்கு'' என்று பல சாதனையாளர்களை உருவாக்கிய கோச் நாகராஜன் வானத்தை வெறித்துப் பார்த்தபடி பதிலளித்தார்.

தமிழ்நாட்டின் பி.டி. உஷாவாக உருவாகிக் கொண்டிருப்பவர் கே.என். ப்ரியா. ''மும்பையில் நடந்த மீட்ல நான் போயிருந்தா, ஈஸியா ஜெயிச்சிருப்பேன். ஆனா எந்தவித ப்ராக்டீஸும் இல்லாம எப்படி போட்டிக்குப் போக முடியும் சொல்லுங்க! பீச் மணல்ல ஓடி ப்ராக்டீஸ் பண்றதால காலெல்லாம் வலிக்குது. வீட்ல போய் படுத்தா காலையில் எந்திரிக்கவே முடியலை. ரொம்பக் கஷ்டமா இருக்கு சார்'' என்று அவர் கூறும்போது, அடுத்த சீன ஒலிம்பிக்ஸில் எப்படியும் மெடல் வாங்கியே தீருவோம் என்று கங்கணம் கட்டிக்கொண்டு வருந்தி உழைக்கும் இவரைப்போன்ற விளையாட்டு வீரர்களுக்கு, இச்சமூகம் செய்யும் நன்றியைப் பார்த்து குமுறத் தோன்றுகிறது.

ஒலிம்பிக்ஸிலிருந்து வெறுங்கையுடன் திரும்புகிறவர்களைப் பார்த்து, வெறுமனே தாம்தூமென்று குதித்தால் மட்டும் போதாது. அத்தனை கடுமையான போட்டிகளுக்கிடையேயும் நம் தாய் நாட்டிற்குப் பெருமை தேட முயல்பவர்களுக்கு, நாம் ஒரு துரும்பையாவது கிள்ளிப் போட்டோமா என்பதை சம்பந்தப்பட்டவர்கள் யோசிக்க வேண்டும்.

- கண

படங்கள்: முகில்

## பட்டும்படாத பதில்!

இப்பிரச்சனை தொடர்பாக தமிழக விளையாட்டு அமைச்சர் மற்றும் சுகாதார அமைச்சர் இருவரிடமும் முறையிட்டும், இதுவரை எந்த ரியாக்ஷனும் இல்லை. சரி, எம்.எம்.சி. தரப்பு என்ன சொல்கிறது என்று விசாரிக்க,

''அதான் காலையில் கிரவுண்ட் கொடுக்கிறோமே... எங்கள் மாணவர்களுக்கு மாலை நேரத்தில் விளையாட இடம் வேண்டும். மாணவர்கள் வைத்த கோரிக்கையின் அடிப்படையில், கவுன்சில் எடுத்த முடிவுதான் இது'' என்ற பட்டும்படாத பதில்தான் கிடைத்தது. ஆனால் மருத்துவக் கல்லூரி மாணவர்களிடம் பேசியதில், ''பொதுவாக எம்.பி.பி.எஸ். படிப்பவர்களுக்கு அவ்வளவாக விளையாட்டில் நாட்டம் இருக்காது. இருபத்து நான்கு மணி நேரமும் படிப்பு படிப்பு என்றுதான் இருப்போம்'' என்று ப்ரைம் ஸ்போர்ட்ஸுக்கு சாதகமாகவே பேசினார்கள்.



சகிப்புத் தன்மை, சமநோக்கு, பொறுமை, கடமை, கண்ணியம் போன்ற வார்த்தைகள் 'அரசியல் அகராதி'யிலிருந்து நீக்கப்பட்டுவிட்டன என்பதுதான் நிதர்சன உண்மை என்பதை 'ஆசிரியர் பக்கம்' நெத்தியடியாகச் சுட்டிக் காட்டியதாக ஆனந்தப்படுகிறார் ஆதம்பாக்கம் **எஸ். விஜயலக்ஷ்மி**

காஸ்யபன் எழுதிய 'தண்ணீர் பவுசு' சிறுகதை மிகவும் சூப்பர். அடக்கன் குணம் மிகவும் யதார்த்தமாக அமைந்த விதம் நன்றாக இருந்தது என்கிறார் காமநாயக்கன்பாளையம் **மா. மோகனராசன்**

# பலமான அறை!



'வேண்டாம் வணநாயகம்' தலையங்கம் காங்கிரசுக்கு இலேசான ஒரு கொட்டும், சிவசேனா மற்றும் பி.ஜே.பி.க்கு பலமான ஒரு அறையும் தந்திருக்கிறது. ஜனநாயகத்தை மதித்து, நாடாளுமன்றத்தில் இவர்கள் நாடு மதிக்க நல்லதோர் மக்கள் பிரதிநிதிகளாக நடந்து கொள்வது இயலாத காரியம்தானோ என்று ஆதங்கப்படுகிறார் மதுரை **இரா. கல்யாணசுந்தரம்**

வர, வர 4,5,6 விஷயம் ஏக கலக்கலாக அமைந்து, எங்களை ரொம்பவும் குஷிப்படுத்துகின்றது என்று குதூகலிக்கிறார் மதுரை **பி. ராஜசேகரன்**




## வட்டமேஜை

'ஆட்சிக் கலைப்புக்குப் பயந்து
ஆளுநருக்கு வக்காலத்தா?' என்கிற
மைத்ரேயனின் மட்டையடி விளாசல்
கல்கிக்கு விளக்கமா இல்லை தி.மு.க.வுக்குச்
சரியான நோஸ்கட்டா என்று கேட்கிறார்
பள்ளிப்பாளையம் ரஞ்சனிப்ரியன்





'குடைக்குள் மழை'
அருமையான விமர்சனம்.
ஆனால், பார்த்திபனோடு அசத்திய
ஆர்ட் டைரக்டரையும் ஒரு வரி
பாராட்டி இருந்தால் நிறைவாக
இருந்திருக்கும் என்று
ஆதங்கப்படுகிறார்
சிகரம் தங்கநிலா

நான் உருவாக்கிய மென்பொருள்
எழுத்துருகள் சாதாரண தட்டச்சு முறையில் சிறு
மாற்றங்களுடன் என்கோடிங் செய்யப்பட்டுள்ளன.
எம்.எஸ்.வேர்டில் ஒரு நீண்ட மேக்ரோ என்னும்
சிறப்புச் செயலியை உருவாக்கி உள்ளேன்
என்று விளக்கமளிக்கிறார்
சென்னை கடுகு

ஜெ. அரசு 'எச்' முத்திரையை
ரத்து செய்ததை சாதனையாகச்
சொல்லியிருப்பது பற்றிய கேள்விக்கு,
மிகச் சரியான பதிலடி தந்து, 'தராசு,' தனி
முத்திரை பதித்துவிட்டார் என்று
பாராட்டுகிறார் அயன்புரம்
த. சத்தியநாராயணன்



*('பாராட்டுக் கடிதங்களுக்கும் சோகச் சித்திரங்களா?'
என்று கேட்கிறார் ஓர் அநாமதேயம்!)*

# மங்கையர் மலர்



அக்டோபர் 2004

## நவராத்திரி இரட்டைச் சிறப்பிதழ்

புதிய ஆசிரியர்

## ரேவதி சங்கரன் தயாரிப்பில்...

அனுபவங்கள், அலசல், அழகுக் குறிப்புகள்,
ஆன்மிகச் செய்திகள், அற்புதமான அட்டைப் படம்

## ஆசிரியரின் அன்பு வட்டம்

பாரம்பரியம் போற்றும் புதிய மிடுக்குடன்
வெளிவருகிறது...

*தவற விடாதீர்கள்!*

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358/ 03 - 05 * Registered as a Newspaper in Srilanka